# ஆண்டாள் அருளிய

## திருப்பாவை - நாச்சியார் திருமொழி

மூலமும் எளிய தமிழ் உரையும்

*சேலம் பா. அன்பரசு*
புலவர்., எம்.ஏ., எம்.எட்., எம்.பில்., டிப் – இதழியல்.,



*THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALA TIRUPATI DEVASTHANAMS UNDER THEIR SCHEME AID TO PUBLISH RELIGIOUS BOOKS.*

ISBN 81-900144-0.2

## நூல் விவரம்



| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | ஆண்டாள் அருளிய<br>திருப்பாவை – நாச்சியார் திருமொழி<br>எளிய தமிழ் உரை<br>Andal's<br>Thiruppavai - Nachiyar Thirumozhi<br>Explanatory Note in Simple Tamil. |
| நூலின் வகை | : | சமய இலக்கியம் |
| உரையாசிரியர் | : | சேலம் பா. அன்பரசு (Salem B. Anbarasu) |
| பதிப்பு | : | முதல் பதிப்பு – செப்டம்பர் 2001, 1000 படிகள் |
| பதிப்புரிமை | : | உரையாசிரியருக்கு |
| தாள் | : | 10.9 KG White Printing |
| நூல் அளவு | : | கிரெளன் |
| பக்கங்கள் | : | 134 + 8 = 142 பக்கங்கள் |
| ஒளி அச்சு<br>அச்சகம் | : | காதம்பரி அச்சகம்,<br>62/1–54 A, டாக்டர் சுப்பராயன் சாலை,<br>சேலம் – 636 001.<br>(R.V.B. Computor Prints, Salem -1.) |
| பைண்டு | : | லெக்சிகன் செக்ஷன் தையல் |
| விலை | : | ரூ. 40/– |
| வெளியீடு | : | விஜயம் பதிப்பகம்,<br>30, சென்ன கிருஷ்ணன் தெரு,<br>சேலம் – 636 002.<br>Vijayam Pathippagam,<br>30, Chenna Krishnan Street,<br>SALEM - 636 002. Tamil Nadu.<br>✆ 0427 - 214280. |



*



இந்நூல்
எனது தந்தைக்கு *

– உரையாசிரியர்




* பாலைய சுவாமிகள் 1885 – 1963

# பொருளடக்கம்

## பதிப்புரை

பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவராகிய ஆண்டாள் அம்மையார் எழுதிய திருப்பாவை 30 பாசுரங்கள், நாச்சியார் திருமொழி 143 பாசுரங்கள் ஆகியவற்றுக்கு சேலம் பா. அன்பரசு எழுதிய எளிய தமிழ் உரைதான் இந்நூல். திருப்பாவை, மார்கழி மாதம் பெண்கள் நோற்கும் பாவை நோன்புபற்றிக் கூறுகிறது. நாச்சியார் திருமொழி, தலைவனைப் பிரிந்த ஒரு தலைவியின் பிரிவுத் துயரத்தைப் பற்றியும், அவனை அடைய அவள் படும் உடல் மற்றும் உள்ளம் சார்ந்த துயரத்தைப் பற்றியும் பேசுகிறது.

தன்னைத் தலைவியாகவும், கண்ணனைத் தலைவனாகவும் ஆண்டாள் பாவித்துக் கொண்டு பாடியவை நாச்சியார் திருமொழி. தலைவனோடு உள்ளத்தாலும், உடலாலும் இணையத் துடிக்கும் துடிப்பு, பரமாத்மாவுடன் சிவாத்மா ஒன்றிக் கலப்பதை கவிஞர் இம்முறையில் பாடினார் என்றும் குறிப்பிடுவார்கள்.

இந்நூலாசிரியரின் திறமைகள் பலவகையிலும் பரிணாம வளர்ச்சி பெற்றவை என்பது இவர் ஏற்கனவே எழுதிய பல்வேறு பதிப்பகங்கள் மூலம் வெளியான நூல்கள் மற்றும் வானொலி மூலம் ஒலிபரப்பான கவிதை, வானொலி உரை மற்றும் நாடகங்கள் இவற்றின் வாயிலாக அறியலாம்.

இந்நூல் வெளியிட திருமலை—திருப்பதி தேவஸ்தானம் நிதியுதவி அளித்துள்ளது. "கபீர் தாசரின் கவிமலர்கள்" என்னும் இவரது நூல் வெளியிட திருமலை திருப்பதி தேவஸ்தானம் நிதியுதவி செய்து, எமது பதிப்பகம் மூலம் 1988 ம் ஆண்டு வெளியிட்டுள்ளோம்.

இப்போது இந்நூலை வெளியிடுவதில் மிகவும் மகிழ்ச்சியடைகிறோம். இந்நூல் பக்தி நெறியாளர்க்கே உரியது என்று கருதிவிடாமல், ஆய்வாளர்களும், பல்கலைக்கழக மாணவர்களும், சாமானியரும் படித்துப் பயன்பெற அன்புடன் வேண்டுகிறோம்.

விஜயம் பதிப்பகம்,
சேலம் – 636 002.

பேராசிரியர் டாக்டர் மதி. சீனிவாசன்,
1, நாகாத்தம்மன் கோவில் தெரு விரிவு,
அசோக் நகர், சென்னை – 6000083.

## வாழ்த்துரை

*எழுத்தாற்றலும், பேச்சுத்திறமும் கொண்ட புலவர் பா. அன்பரசு அவர்கள் தமிழ் உலகுக்கு நல்ல பல நூல்களை ஆக்கி அளித்துள்ளனர். தற்போது அவர் 'திருப்பாவை–நாச்சியார் திருமொழி உரை' நூலை எழுதி வெளியிட்டுள்ளார். சிறுகதை, நாடகம், தொல்லியல் ஆய்வு ஆகிய துறைகளில் புகழ் பெற்றுள்ள அவர் ஆண்டாளின் கவிதைகளில் நெஞ்சார்ந்து, இந்த அருமையான நூலைப் படைத்துள்ளார். அன்னாருக்கு அடியேன் பாராட்டினையும், வாழ்த்தினையும் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் மேலும் இதுபோன்ற நல்ல நூல்களை எழுதி வெளியிட்டு இலக்கியப் பணி தொடர நெஞ்சு நெகிழ்ந்து வாழ்த்துகிறேன்.*

*வெல்க அவர் பணி!*

*சென்னை* - 83 — *அன்புடன்,*
24.9.2001. — *(ஒப்பம்) மதி. சீனிவாசன்*

## பார்வைக்கு உதவியவை

| | |
|---|---|
| நாச்சியார் திருமொழி (நாலாயிர திவ்யபிரபந்தம் –மூலம்) | : B. இரத்தின நாயக்கர் & சன்ஸ், சென்னை. பழைய பதிப்பு |
| திருப்பாவை (நித்யானுசந்தானம்) | : காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணாங்கராச்சாரியார் உரை லிபார்ட்டி பிரஸ், சென்னை. -1943 |
| நாச்சியார் திருமொழி | : ஆர்வார்கள் அமுத நிலையம், சென்னை – 2. |
| Sri Andal Her contribution to literature philosophy religion & Art (A Compliation of Luctures during All India seminar on Andal. Aug 1983). | : Sri Ramanaja Vedanta Centre, CHENNAI 5. -1985 |
| 108 ஸ்ரீ வைஸ்ணவ திவ்ய தேச வைபவமும் புராண அபிமான ஸ்தலங்களும். | : லிட்டில் ப்ளவர் கம்பெனி, சென்னை – 17. -1995 |
| திருப்பாவை திருவெம்பாவை சேலம் பா. அன்பரசு (எளிய தமிழ் உரை) | : நர்மதா பதிப்பகம் சென்னை – 17. - 1997 |

## கடிதங்கள்

| | |
|---|---|
| திரு. சே. இராமனுஜாச்சாரியார் ஆசிரியர், திருமால், சென்னை 4. | : 15.11.96 & 18.8.2001 |
| புலவர் திரு. அ.கோபாலகிருஷ்ணன் எம்பெருமானார் இல்லம், ஆண்டகலூர் கேட் – 637 401. நாமக்கல் மாவட்டம். | : 11.3.2001 & 27.8.2001 |
| டாக்டர் திரு. மதி. சீனிவாசன் நாகாத்தம்மன் கோயில் தெரு விரிவு, அசோக் நகர், சென்னை–83. | : 24.9.2001 |

## திருப்பாவை பாடல்களின் இராகதாளங்கள்

| வ. எண். | பாடலின் முதல் அடி | இராகம் | தாளம் |
|---|---|---|---|
| 1. | மார்கழித் திங்கள் | பிலகரி | அட |
| 2. | வையத்து வாழ்வீர்கள் | பந்துவராளி | ஆதி |
| 3. | ஓங்கி உலகளந்த | பந்துவராளி | திரிபுடை |
| 4. | ஆழிமழைக்கண்ணா | காம்போதி | ஆதி |
| 5. | மாயனை | தோடி | ரூபகம் |
| 6. | புள்ளும் சிலம்பின | பூபாளம் | ஆதி |
| 7. | கீசுகீசு என்று | பூபாளம் | ரூபகம் |
| 8. | கீழ்வானம் | பூபாளம் | ஆதி |
| 9. | தூமணி மாடத்து | மோகனம் | ஆதி |
| 10. | நோற்றுச் சுவர்க்கம் | அசாவேரி | ஆதி |
| 11. | கற்றுக் கறவை | சகாநா | திரிபுடை |
| 12. | கனைத்திளங்கன்று | கேதாரகவுளம் | ஆதி |
| 13. | புள்ளின் வாய் | அடாணா | ரூபகம் |
| 14. | உங்கள் புழைக்கடை | சாரங்கா | ஆதி |
| 15. | எல்லே இளங்கிளியே | சௌராஸ்டிரம் | அட |
| 16. | நாயகனாய் நின்ற | யமுனா கல்யாணி | ஆதி |
| 17. | அம்பரமே தண்ணீரே | யமுனா கல்யாணி | ரூபகம் |
| 18. | உந்து மதகளிற்றின் | சாவேரி | ஆதி |
| 19. | குத்துவிளக்கெரிய | ஸ்ரீராகம் | ஆதி |
| 20. | முப்பத்து மூவர் | தேசிய | ஆதி |
| 21. | ஏற்றகலங்கள் | காம்போதி | ஆதி |
| 22. | அங்கண்மா ஞாலத்து | பைரவி | ஆதி |
| 23. | மாரிமலை | அடாணா | ஆதி |
| 24. | அன்று இவ்வுலகம் | பியாகடை | திரிபுடை |
| 25. | ஒருத்தி மகனாய் | சங்கராபரணம் | ஆதி |
| 26. | மாலே மணிவண்ணா | ஆரபி | ஆதி |
| 27. | கூடாரை வெல்லும் | ஆனந்தபைரவி | ஆதி |
| 28. | கறவைகள் பின்சென்று | தந்யாசி | ஆதி |
| 29. | சிற்றஞ் சிறகாலே | கல்யாணி | ஆதி |
| 30. | வங்கக் கடல் | சுருட்டி | ரூபகம் |

* திருப்பாவை பாடல்களுக்குரிய இராக தாளங்களின் பெயர்கள் உரிய இடங்களில் கொடுக்கப்படாததால் தனியாக இங்கு தரப்பட்டுள்ளது.



## முன்னுரை

திருப்பாவை, நாச்சியார் திருமொழி எளிய தமிழ் உரை என்னும் இந்நூலில் திருப்பாவை முப்பது பாடல்களும், நாச்சியார் திருமொழி நூற்று நாற்பத்து மூன்று பாடல்களும் இடம் பெற்றுள்ளன. இப்பாடல்களைப் பாடியவர் ஆழ்வார்களில் ஒருவராகிய ஆண்டாள் அம்மையார்.

இந்நூலில் இடம் பெற்றுள்ள ஆசிரியர் வாழ்க்கைச் சுருக்கம் என்னும் பகுதியில் ஆண்டாளின் வரலாறு வைணவ சமய மரபுப்படி சுருக்கமாகத் தரப்பட்டுள்ளது. இவர் வாழ்ந்த காலம் எது என்பதைச் சுருக்கமாகக் குறிப்பிடலாம்.

ஆண்டாளின் வளர்ப்புத் தந்தை பெரியாழ்வார் என்பவர். இவருக்குப் பட்டர் பிரான், விட்டு சித்தர் என்னும் பெயர்களும் உள்ளன. மதுரையை ஆண்ட பாண்டிய மன்னனிடம் இவர் சிறப்புகள் பெற்றவர். 'அபிமான துங்கன்' (திருப்பல்லாண்டு: பாடல்—11) என்னும் ஓர் அரசரின் பெயரை தமது பாடல் ஒன்றில் குறிப்பிட்டுள்ளார் பெரியாழ்வார். ஒரு துளசிச் செடியின் பக்கத்தில் பெரியாழ்வார் ஒரு குழந்தையைக் கண்டெடுத்ததாகவும், அந்தக் குழந்தையே ஆண்டாள் என்றும் கூறப்படுகிறது.

பெரியாழ்வார் வாழ்ந்த காலமே ஆண்டாள் வாழ்ந்த காலமாகும். புகழ்பெற்ற வரலாற்று ஆசிரியராக விளங்கிய திரு. கோபிநாதராவ் சீமாறன் சீவல்லபன் ( நெடுமாறன்) ஆட்சி செய்த காலமாகிய கி. பி. 9 ஆம் நூற்றாண்டு என்பார்.

திருப்பாவை 13 ஆம் பாசுரத்தில் ஆண்டாள் குறிப்பிடும் 'வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று' என்னும் கோள்களின் நிலையை ஆராய்ச்சி செய்த திரு. ஈ. எஸ். வரதராஜ அய்யர், அந்த நாள் 18 ..12. 0731 என்று குறிப்பிட்டுள்ளார்.

கால ஆராய்ச்சியில் நாட்டம் உள்ளவர்களுக்காக ஆண்டாளின் காலம் இங்கு சுருக்கமாகக் குறிப்பிடபட்டுள்ளது.





பன்னிரண்டு ஆழ்வார்களில் ஒருவராக ஆண்டாளுக்கு ஓரிடம் தந்திருப்பதே, அக்காலத்தில் பெண்கள் நன்கு மதிக்கப்பட்டார்கள் என்பதற்கும், கல்வியில் மேம்பட்டு விளங்கினார்கள் என்பதற்கும் போதிய சான்றாகும்.

திருப்பாவை முப்பது பாசுரங்களில் இடைக்குலப் பெண்கள் பாவை நோன்பு நோற்று கண்ணனை வழிபாடு செய்யும் முறை கூறப்பட்டுள்ளது. 29 ஆம் பாசுரத்தில் குறிப்பிடப்படும் 'பறை' என்னும் சொல்லுக்கு இசைக்கருவி என்று சிலர் கூறும் பொருள் பொருத்தம் அற்றதாகும். போயும் போயும் 'பறை' என்னும் ஓர் இசைக்கருவியைக் கண்ணனிடம் இருந்து பெறுவதற்காகவா ஆயர்க்குடிப் பெண்கள் முப்பது நாள் பாவை நோன்பு நோற்றிருப்பார்கள்?

திருப்பாவையில் 'பறை' என்னும் சொல் பல்வேறு பொருள்களில் வந்துள்ளது. இசைக்கருவி, பரிசு, மோட்ச உலகு என்னும் பொருள்கள் இடத்திற்கேற்றபடி தரப்பட்டுள்ளன.

ஆனால் மேற்குறிப்பிடப்பட்ட 'சிற்றஞ் சிறுகாலே' என்னும் 29 ஆம் பாடலில் ஆய்ச்சியர்ப் பெண்கள் விரும்புவது கண்ணனின் உடனிருந்து ஏழேழு பிறவிகளுக்கும் குற்றேவல் செய்வதும், தீய எண்ணங்கள் மனதில் ஏழாதவாறு போக்கி அருள வேண்டும் என்பதும் ஆகும்.

குற்றேவல் என்பதற்கு அத்தானிச்சேவகம், அதாவது 'பரதனைப் போல் விலகிநின்று செய்த அடிமை அல்லாமல் இளைய பெருமாளாகிய இலட்சுமணனைப் போல் காட்டிலும், நாட்டிலும் தொடர்ந்து நின்று செய்த அடிமை' என்று பொருள் கொண்டுள்ளார்கள்.

திருப்பாவை ஒரு பக்தி இலக்கியம் மட்டும் அல்லாமல் கதா பாத்திரங்கள் ஒருவருக்கு ஒருவர் பேசிக்கொள்ளும் நாடக இலக்கணப் பண்புகள் பெற்று விளங்குகிறது. இதற்கு எடுத்துகாட்டாக 'எல்லே இளங்கிளியே' என்று தொடங்கும் பாடலைக் குறிப்பிடலாம்.



திருப்பாவைப் பாடல்கள் தமிழ்பேசப் படாத மாநிலங்களிலும் கூட, தமிழிலேயே பாடப்படுகின்றன. இதன் சிறப்பை உணர்ந்த தெலுங்கு மன்னர் கிருஷ்ண தேவராயர் 'ஆமுக்த மால்யதா' என்னும் பெயரில், ஆண்டாளைப் பற்றி ஒரு நூலைச் செய்தார். 'சூடிக் கொடுத்த சுடர்க்கொடி' என்பது இதன் பொருள் ஆகும்.

கிருஷ்ண தேவராயர் இந்நூல் எழுதியதற்குக் காரணமாக ஒரு கதை கூறப்படுகிறது. இவர் கலிங்க நாட்டைத் தம் எல்லையில் சேர்த்துக் கொள்வதற்காக (கி. பி. 16) அதன் மேல் போர்தொடுத்தார். அப்போது அங்கு அவர் சில நாட்கள் தங்கினார். அங்கிருந்த ஸ்ரீகாகுளம் என்னுமிடத்திற்குப் பயணம் மேற்கொண்டார். இந்த ஊர் கிருஷ்ணா நதிக் கரையில் உள்ளது.

ஸ்ரீகாகுலத்தில் கோயில் கொண்டுள்ள திருமாலுக்கு 'ஆந்திர விஷ்ணு' என்னும் பெயர் உண்டு. கிருஷ்ண தேவராயர் அங்கு தங்கியிருந்த போது ஏகாதசி விரதம் இருக்க வேண்டி வந்தது. அன்று இரவு அவரது கனவில் இறைவர் தோன்றி, 'மன்னா ! நீ ஏற்கனவே சமஸ்கிருத மொழியில் பல நூல்களை எழுதியிருக்கிறாய். தெலுங்கு மொழியில் ஒரு நூல் படைப்பது உனக்குக் கடினம் அல்ல. திருவரங்கத்தில் அரங்கநாதனை மணந்தாளே அந்தப் பெண், அவளைப் பற்றி எழுது. அந்த நூல் திருப்பதி திருவேங்கடப் பெருமானுக்கு உனது படைப்பாக இருக்கட்டும். திருவேங்கடப் பெருமானாகவும், திருவரங்கப் பெருமானாகவும் நானே இருக்கிறேன், என்று கூறி மறைந்தார்.

கிருஷ்ண தேவராயரின் ஆமுக்தமால்யதா என்னும் நூலின் ஐந்தாவது மற்றும் ஏழாவது காண்டம் ஆண்டாளைப் பற்றிய பெருமையைப் பேசுகிறது. மற்ற காண்டங்கள் விட்டு சித்தரைப் பற்றியும் வேறு அடியார்களைப் பற்றியும் கூறுகிறது. இந்நூலுக்கு 'விஷ்ணு சித்தியம்' என்றும் பெயர்.

*முற்பிறவியில் ஆண்டாள் பூதேவியாக இருந்தாள். இப்பிறவியில் 'கோதா' (கோதை) என்று அழைக்கப்பட்டாள். இறுதியில் திருவரங்கப் பெருமானை ஆண்டாள் மணந்தாள் என்று கதை முடிகிறது.*

*இதே போல இந்திய நாட்டின் பல பகுதிகளில் உள்ள திருமால் தலங்களில் ஆண்டாளுக்கென்று தனி சன்னதிகள் உள்ளன. திருப்பாவை தங்கள் தாய் மொழியிலும் ஆங்கிலத்திலும் மொழியாக்கம் செய்யப்பட்டிருந்தாலும் தமிழிலேயே இசையுடன் பாடப்படுகிறது.*

*மார்கழி மாதம் என்றாலே வைணவ சமயத்தைச் சேர்ந்தவர்களும் திருமால் அடியார்களும், மற்றவர்களும், மார்கழி நோன்பை நோற்பவர்களும் உலக அளவில் பாராயணம் செய்யும் பாடல்கள் திருப்பாவை ஆகும்.*

*இது மட்டும் அல்லாமல் வைணவக் குடும்பங்களில் திருமணம் போன்ற மங்களகரான நிகழ்ச்சிகளின் போது மங்களா சாசனமாகப் பாடப்படும் 'ஓங்கியுலகளந்த' என்று தொடங்கும் திருப்பாவைப் பாடல் நாலாயிரத்தின் சிகரமாக விளங்குகிறது என்றால் மிகை ஆகாது.*

*நாச்சியார் திருமொழியைப் பற்றி இங்கு சிறிது குறிப்பிடலாம். 'சிற்றஞ் சிறுகாலே' என்று தொடங்கும் திருப்பாவைப்பாடலில் ஆயர்க்குலப் பெண்கள் மார்கழி நோன்பு நோற்று கூட்டமாகச் சென்று கண்ணனின் இல்லம் அடைகிறார்கள். அவனை சேவிக்கிறார்கள். அவனோடு உடனிருந்து ஏவல் செய்ய உள்ளதாகவும், மனதிலுள்ள தீய எண்ணங்களை மாற்றுமாறும் வேண்டுகிறார்கள். ஆனால் நாச்சியார் திருமொழி முழுவதும் பிரிவுத் துயரத்தைப் பற்றியே பேசுகிறது.*

*இறைவனை ஆணாகவும், தம்மைப் பெண்ணாகவும் நினைத்துப் பாடி வழிபடுவது சமயம் சார்ந்த கவிஞர்கள் வழக்கம். இதை நாயகன் நாயகி பாவம் என்பார்கள். ஆனால்*



ஆண்டாள் பிறவியிலேயே பெண்ணாக இருப்பதால், நாயகி நிலையில் இருந்து பாடுவது இயல்பாக ஆயிற்று.

கண்ணனிடம் ஆண்டாள் கொண்ட பக்தியுணர்வு காதலாகப் பரிணாமம் அடைகிறது. இவளது தலைமயிரால் மாசுபட்ட மாலையையே வில்லிபுத்தூர் பெருமான் விரும்பி அணிந்தார். இந்நிகழ்ச்சி அவள் கண்ணன் மேல் கொண்டிருந்த காதலுக்குக் கூடுதலான ஓர் அங்கீகாரமாக அமைந்துவிட்டது.

கண்ணன் என்னும் நினைவே அவளுடைய பேச்சும் மூச்சுமாக அமைந்தது. இருந்தாலும் கண்ணன் ஆண்டாளுக்கு நேரில் காட்சி தராமல் அவளை உறவாடி ஏங்க வைத்தான். அவளோ, அவனுடன் உள்ளத்தாலும், உடலாலும் கூடி உறவாடி மகிழ்ச்சி அடைய நினைக்கிறாள்.

கண்ணனிடம் தன்னைக் கூட்டுவிப்பதற்காகக் காமக் கடவுளின் தயவை நாடுகிறாள்.

"யாருக்காகப் பயன்பட வேண்டுமோ அவருக்காகப் பயன்படாத எனது மார்பகங்களை வேருடன் பிடுங்கி அவனது (கண்ணனுடைய ) மார்பில் எறிந்து எனது காமக்கனலை ஆற்றிக் கொள்வேன்" என்கிறாள் ஆண்டாள்.

"மன்மதனே! துவரையின் அளவிலிருந்து தற்போது நன்கு வளர்ந்துள்ளன எனது மார்பகங்கள். வெறும் மனிதருக்கு என்று, திருமணப் பேச்சு பேசப்படுமானால் நான் வாழமாட்டேன்" (நாச்சியார் : பாடல் 4 ,5) என்பது ஆண்டாளின் ஏக்கம்.

தமிழ் அகப்பொருள் இலக்கண மரபுகளின்படி வேறு எந்த காப்பியத் தலைவியரும் இவ்வாறு தங்கள் ஏக்கத்தை இவ்வளவு வெளிப்படையாக வெளியிட்டதில்லை.

திருமாலின் துணைவியாகிய பூமித்தாய் ஆண்டாளாகப் பிறந்ததால் இருவருக்கும் இடையில் பிரிவு ஏற்பட்டதாகவும் மீண்டும் ஆண்டாள் தனது கணவனாகிய

கண்ணனை (திருமாலை) அடையும் ஏக்கமே இவ்வாறு அவளைப் பேசச் செய்தது என்பதும் வைணவ நூல்களின் உரையாசிரியர்கள் தரும் விளக்கம் ஆகும்.

ஆகவே 'பிரிவாற்றாமை' என்னும் நிலையில் பிறந்ததுதான் நாச்சியார் திருமொழி. மானிடப் பெண்ணாகப் பிறந்த ஆண்டாள் கண்ணனின் கைப்பிடிப்பதாகக் கனவு காண்கிறாள். இதை 'வாரணம் ஆயிரம்' என்று தொடங்கும் பாசுரத்தால் வெளிப்படுத்துகிறாள்.

"காதலைப் பற்றிப்பாடும் கவிஞர்கள் தாங்கள் காதலினால் அடைந்த மகிழ்ச்சியை அதிகம் பாடுவதில்லை. அதை விட்டுவிட்டு, தாங்கள் காதல் உணர்வால் அடைந்த துன்பங்களையே அதிகம் வெளிப்படுத்துவார்கள்" என்று ஜே.எம். மர்ரே என்னும் அறிஞர் குறிப்பிட்டுள்ளார்.

'கார்கோடல் பூக்காள்' என்று இயற்கைப் பொருள்களை அழைத்து ஆண்டாள் தனது தகிப்பை— ஏக்கத்தை வெளியிடுகிறாள்.

"எனது எலும்புகள் உருகி எனது கண் இமைகள் மூடாது உறக்கம் இல்லாமல் துன்பம் என்னும் கடலில் மூழ்கிவிட்டேன். வைகுந்தன் என்னும் தோணி (படகு) எனக்குக் கிட்டவில்லையே" என்று ஆண்டாள் கூறியிருப்பதிலிருந்து அவளது பிரிவாற்றாமை உணர்வு வெளிப்படுகிறது.

ஆண்டாளின் பேராசையைப் பாருங்கள். "பாற்கடலில் படுத்திருக்கும் தலைவனுடன் ஒன்றிக் கலக்க வேண்டும்" (புணர்வதோர் ஆசையால்) என்பது அவளது ஏக்கம்.

கவித்துவமும், கற்பனையும், கைவரப் பெற்றவை ஆண்டாளின் நாச்சியார் திருமொழி. கற்பனையின் ஊற்று. அது கம்பீர நடை. ஏக்கத்தின் பிழிவு. நாலாயிரத்தின் மணிமுடி.



பாடல்களில் ஒரு சில குறைபாடுகளையும் காணலாம். ஆசிரிய விருத்தம் என்று குறிப்பிடப்படும் பாடல்கள் சில குறைந்த சீர்களையே கொண்டு உள்ளன. இது கவிஞராகிய ஆண்டாளின் குற்றமாக இருந்திருக்காது. எழுதியவர் ஏட்டைக் கெடுத்தார் என்பது போல ஏடெழுதியவர் கவனக் குறைவாக இருக்கலாம்.

எடுத்துக்காட்டாகக் கீழ்வரும் பாடலைக் குறிப்பிடலாம்.

ஆரே உலகத்து ஆற்றுவார்
ஆயர்பாடிக் கவர்ந்து உண்ணும்
காரேறு உழக்க உழக்குணம்
தளர்ந்தும் முறிந்தும் கிடப்பேனை
ஆரா வமுதம் அனையான்தன்
அமுத வாயில் ஊறிய
நீர்தான் கொணர்ந்து புலராமே
பருக்கி இளைப்பை நீக்கீரே

இப்பாடலின் 'ஆரா வமுதம் அனையான்தன் அமுதவாயில் ஊறிய' இச் சொற்றொடரில் மற்ற நான்கு அடிகளில் காணப்படும் ஓசையின் அளவு காணப்படவில்லை.

'தையொரு திங்களும் தரைவிளக்கி' என்று தொடங்கும் பாடலில் ஆண்டாள் காலத்தில் செய்யப்பட்ட மன்மதன் வழிபாட்டுமுறை கூறப்பட்டுள்ளது.

'வாரணம் ஆயிரம்' என்று தொடங்கும் பாடல்களில் அக்கால அந்தணர் குடும்பத் திருமண முறை படம் பிடித்துக் காட்டப்பட்டுள்ளது.

ஆண்டாள், தான் வாழ்ந்த வில்லிபுத்தூரை கண்ணன் வாழ்ந்த ஆயர்பாடியாகவும், தன்னை ஆயர் பெண்ணாகவும் கற்பனை செய்து கொண்டு பாடியது போல் திருப்பாவையும் நாச்சியார் திருமொழியில் சில பகுதிகளும் காணப்படுகின்றன.

இருந்த போதிலும் பிராமணக் குடும்பங்களில் பேசப்படும் சொற்களும் பேச்சு மொழிச் சொற்களும் பல இடங்களில்

*காணப்படுகின்றன. அம்மனாய், மாமீர், மாமன்மகள், கண்ணாலம் ஆகிய சொற்களை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.*

*ஒருவரைவிடத் தகுதியில் குறைந்தவர்களை அழைக்க 'எல்லா' என்னும் சொல் ஒருகாலத்தில் பயன்படுத்தப்பட்டது. திருப்பாவையிலும் நாச்சியார் திருமொழியிலும் 'எல்லே' என்று அச்சொல் திரிந்து காணப்படுகிறது.*

*'பால்சோறுமூட நெய்பெய்து'* (*திருப் : 27*)
*'நூறு தடா நிறைந்த அக்கார அடிசில்'* (*நாச்சியார் : 9 : 6*)
*'இன்னடிசிலோடு பாலமுதூட்டி'* (*நாச்சியார் : 5 : 5*)

*என்னும் சொற்றொடர்கள் அக்கால ஆடம்பர உணவு வகைகளை எடுத்துக்காட்டுகின்றன.*

*திவ்யப் பிரபந்தப்பாடல்களை நான் படித்துக் கற்றவன் அல்லன். வைணவக் குடும்பச் சூழலில் பிறந்து வளர்ந்த காரணத்தால் எனது தந்தையார், அண்ணார் இவர்கள் மூலம் கேட்டுக் கற்றவன்.*

*திவ்யப் பிரப்பந்தத்திற்கு ஏற்கனவே வைணவப் பெரியோர்களால் எழுதப்பட்ட கிரந்த உரைகள் தமிழ் மக்களுக்குப் பயன்படவில்லை. அவையும் காட்சிக்கு அரிதாகி ஒருசாரார் கைகளில் அகப்பட்டுக் கிடக்கின்றன.*

*படிப்பார் இல்லாத காரணத்தினால் பழைய உரைகளும் மறுமதிப்பு செய்யப்படவில்லை.*

*ஆகவே 1998–ம் ஆண்டு 'திருப்பாவை திருவெம்பாவை எளிய தமிழ்உரை' என்னும் பெயரில் ஆண்டாளின் திருப்பாவைக்கும், மாணிக்கவாசகரின் திருவெம்பாவைக்கும் எளிய உரை ஒன்றை நான் எழுதி வெளியிட்டேன்.*

*தற்போது நாச்சியார் திருமொழிக்கு எளிய உரை ஒன்றை எழுதி இரண்டையும் சேர்த்து வெளியிடும் வாய்ப்புக் கிட்டியது. வைணவ சமயத்தில் ஈடுபாடு கொண்டவர்களுக்கும் இலக்கியத்தில் குறிப்பாக அகப்பொருள்*



இலக்கண — இலக்கியத் துறையில் ஈடுபாடு கொண்டவர்களுக்கும் இந்த நூல் மிகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. இந்நூலை அச்சில் கொண்டுவர நிதியுதவி செய்த திருமலை திருப்பதி தேவஸ்தானப் பொறுப்பாளர்களுக்கும், தேர்வு செய்த வல்லுநர்க் குழுவினருக்கும் உளமார்ந்த நன்றி.

*சேலம் — 636 002.* *அன்புடன்,*
*செப்டம்பர், 2001.* *சேலம் பா. அண்பரசு*

*அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்,*
*தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய் —பிஞ்சாய்ப்*
*பழுத்தாளை ஆண்டாளை பக்தியுடன் நாளும்*
*வழுத்தாய் மனமே மகிழ்ந்து.*

*மணவாள மாமுனிகள் — உபதேசரத்தின மாலை.*

*(இப்பாடலின் பொருள்) திருமாலுக்கு எங்கே தீங்கு வந்துவிடுமோ என்று அஞ்சக்கூடிய (வைணவக்) குடிக்கு ஒரு வாரிசாகவும் ஆழ்வார்களையும் விஞ்சி நிற்கக் கூடியவளாகவும் விளங்குபவள் ஆண்டாள். இவள் பிஞ்சிலேயே (அறிவிலும் பக்தியிலும்) பழுத்தவள். மனமே! இவளை தினமும் பக்தியுடனும் மகிழ்ச்சியாகவும் வழிபடுவாயாக).*

* * *

## *ஆண்டாள் வாழ்க்கைக் குறிப்பு*

*வில்லிபுத்தூர் (ஸ்ரீ வில்லிபுத்தூர்) ஒரு காலத்தில் ஆலமரங்கள் நிறைந்த புதராக இருந்தது. வேடர்க் குடியில் பிறந்தவர்கள் பலர் அங்கு வாழ்ந்து வந்தார்கள். அவர்களுள் 'மல்லி' என்பவருக்கு இரண்டு மகன்கள் இருந்தார்கள், இவர்கள் வேடர் தலைவர்கள். மூத்தவன் 'வில்லி' இளையவன் 'கண்டன்'.*

*ஒரு நாள் வேட்டைக்குப் போன கண்டன் புலியால்அடித்துக் கொல்லப்பட்டான். வில்லி ஓர் ஆலமரத்தின் அடியில் மூடிய புதரில் ஒரு திருமால் சிலையும், புதையலும் இருப்பதைக் கண்டான். வில்லி அந்தப் புதையலை எடுத்துக் கோயில் கட்டினான். அங்கிருந்த பழைய நகரையும் புதுப்பித்தான். அந்த நகரம் புதுவை என்றும் வில்லிபுத்தூர் என்றும் அழைக்கப்பட்டது. திருமால் ஆல மரத்தின் அடியில் கிடைத்த காரணத்தால் 'வடவேசுவரன்' என்று அழைக்கப்பட்டார் (வடவை – ஆலமரம்). இது பழைய கதை. வருடங்கள் ஓடின.*

*வில்லிபுத்தூரில் விஷ்ணு சித்தர் என்னும் அந்தணர் வாழ்ந்து வந்தார். இவருக்குப் பெரியாழ்வார், பட்டர்பிரான் ஆகிய பெயர்கள் உண்டு. அவ்வூரில் ஒரு துளசிச் செடியின் அருகில் கண்டெடுத்த ஒரு பெண் குழந்தையை அன்புடன் வளர்ந்து வந்தார் பெரியாழ்வார். குழந்தையின் இயற்பெயர் தெரியவில்லை. பிற்காலத்தில் இவள் ஆண்டாள் என்று அழைக்கப்பட்டாள். ஆண்டாளை இவர் கண்டெடுத்த நாள் ஆடி மாதம் பூர நட்சத்திர நாள்.*

*பெரியாழ்வார் பூஞ்சோலையில் உள்ள மலர்களைப் பறித்து மாலையாகத் தொடுத்து அந்த ஊரில் உள்ள திருமாலுக்குக் கொடுத்து வந்தார். இவர் தொடுக்கும் மாலைகளை ஆண்டாள் வளர்ப்புத் தந்தைக்குத் தெரியாமல் தான் சூடி கண்ணாடியில் அழகு பார்த்து, இருந்தபடியே வைத்து விடுவது வழக்கம்.*



*கோயில் அர்ச்சகர்களுக்கு இதுபற்றித் தெரியாததால் பெரியாழ்வார் கொண்டு வரும் மாலைகளை திருமாலுக்குச் சூட்டி வந்தார்கள்.*

*ஒரு நாள் பெரியாழ்வார் கொண்டு வந்த மாலையில் ஒரு நீண்ட தலைமயிர் இருப்பதைக் கண்டார்கள் கோயில் அர்ச்சகர்கள். மாலை தீட்டுப்பட்டுவிட்டது என்று கூறிப் பெரியாழ்வாரிடம் புதியமாலை தொடுத்துக் கொண்டு வரச் சொன்னார்கள்.*

*புதிய மாலையை திருமால் விரும்பவில்லை. ஆண்டாள் சூடிக் கொடுத்த மாலையையே விரும்பினார். இந்த வழக்கமே அந்தக் கோவிலில் தொடர்ந்து நடந்தது.*

*ஆண்டாள் திருமணப் பருவம் அடைந்தாள். திருவரங்கத்தில் (ஸ்ரீரங்கம்) கோயில் கொண்டுள்ள அரங்கநாதரிடம் மனதைப் பறிகொடுத்து, அங்கு செல்ல வேண்டும் என்று தனது ஆவலை வளர்ப்புத் தந்தையாரிடம் தெரிவித்தாள் ஆண்டாள்.*

*ஆண்டாள் இயற்றிய நாச்சியார் திருமொழியில் 6–ஆம் திருமொழியாகிய 'வாரணம் ஆயிரம்' என்னும் பகுதியில் அவள் கண்ட கனவைக் கூறியிருக்கிறாள்.*

*பெரியாழ்வார் ஆண்டாளைப் பல்லக்கில் ஏற்றி, வில்லிபுத்தூரிலிருந்து திருவரங்கத்திற்குப் பயணம் மேற்கொண்டார். காவிரியின் தென்கரையை அடைந்த போது பல்லக்கிலிருந்து இறங்கிச் செல்ல வேண்டும் என்று நினைத்தாள் ஆண்டாள். அவள் நடந்தால் அவளுடைய கால்கள் வலிக்குமே என்று நினைத்துத் தமது மார்பில் அவளை வீற்றிருக்கும்படிச் செய்தார் திருவரங்கப் பெருமாள். இதை ஆழ்வாருக்கும் காட்டினார். இது வைணவ சமய நம்பிக்கை.*

*தந்தையாருடன் ஆண்டாள் வில்லிபுத்தூர் திரும்பினாள். வில்லிபுத்தூரில் ஆண்டாள் – அரங்கநாதர் திருமணம் பங்குனி உத்திர நாளில் நடந்தது.*

வைஷ்ணவ மரபு வழக்கப்படிக் கூறப்பட்டு வரும் செய்திகளை அடிப்படையாக வைத்து ஆண்டாளின் வாழ்க்கைக் குறிப்பு இங்கு தரப்பட்டுள்ளது. ஆண்டாள் இயற்றிய பாடல்கள் திருப்பாவை 30, நாச்சியார் திருமொழி 143.

*திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே*
*திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே*
*பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே*
*பெரும்பூதூர் மாமணிக்குப் பின்னானாள் வாழியே*
*ஒரு நூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே*
*உயர் அரங்கர்க்கே பண்ணி உகந்தளித்தாள் வாழியே*
*மருவாரும் திருமல்லி வளநாடி வாழியே*
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே.

*எளிய உரை:*

ஆடி மாதம் பூர நட்சத்திர நாளில் இவ்வுலகில் பிறந்தவள் ஆண்டாள். 'திருப்பாவை' என்னும் முப்பது பாசுரங்களைப் பாடியவள். பெரியாழ்வார் பெற்றெடுத்த (துளசிச் செடியின் அருகில் கண்டெடுத்த) பெண் பிள்ளை. பெரும்புதூர் முனிவராகிய இராமானுசருடைய தங்கை*. ஒரு நூற்று நாற்பத்து மூன்று பாடல்களை (நாச்சியார் திருமொழி) பாடியவள். தான் சூடிய மாலைகளை திருமாலுக்கு விரும்பித் தந்தவள். வேடர்களின் குடியைச் சேர்ந்த 'மல்லி' என்பவளின் (வில்லி, கண்டன் என்பவர்களின் தாய்) வளமான நாடாகிய 'புதுவை' (புதுப்பிக்கப்பட்ட நகரம்) நகரில் பிறந்த ஆண்டாள் வாழ்க. அவளது மலர் போன்ற திவருவடிகள் வாழ்க !

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

---

*ஆண்டாள் இராமானுசருக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்தவள். இருந்தாலும் வைணவ மரபுப்படி இராமானுசருக்குத் தங்கை என்று கூறப்படுகிறது.



## *ஆண்டாள் பாடிய திருத்தலங்கள்*

| | |
|---|---|
| *தலங்கள் பற்றிய விவரம்* | *ஆண்டாள் பாசுரங்களின் தலைப்பு* |

*(சோழ நாடு)*

*திருவரங்கம் :*

*ஸ்ரீ ரங்கம், பெரிய கோயில் என்று அழைக்கப்படும் தலம். காவிரி கொள்ளிடம் ஆகிய ஆறுகளின் இடையில் அமைந்துள்ளது. திருச்சிராப்பள்ளியிலிருந்து பேருந்து, இரயில் வசதியுள்ளது. மூலவர் : அரங்கநாதர், தாயார்: அரங்க நாயகித் தாயார், மதுர கவி ஆழ்வார் தவிர மற்ற ஆழ்வார்கள் பாடியுள்ளனர்.* ... *தாமுகக்கும்*

*திருகண்ணபுரம் :*

*நாகப்பட்டினத்தில் இருந்து நன்னிலம் போகும் பேருந்தில் பயணம் செய்து திருப்புகலூர் என்னும் இடத்தில் இறங்கிச் செல்ல வேண்டும். நீலமேகப் பெருமாள் மூலவர். தாயார் கண்ணபுர நாயகி. பெரியாழ்வார், ஆண்டாள் குலசேகர ஆழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் பாடியுள்ளனர்.* ... *காட்டில் வேங்கடம்*

*திருமாலிருஞ்சோலை :*

*மதுரையிலிருந்து 12 கல் தொலைவில் உள்ளது. பேருந்து வசதியுண்டு. அழகர், கள்ளழகர், மாலிருஞ்சோலை நம்பி, தாயார் சுந்தர வல்லி. பெரியாழ்வார், ஆண்டாள் திருமங்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகியோர் பாடியுள்ளனர்.* ... *சிந்தூர*

*வில்லிபுத்தூர் (ஸ்ரீ வில்லிபுத்தூர்)*

*விருதுநகர் – தென்காசி இரயில் பாதையில் ஸ்ரீ வில்லிபுத்தூர் இரயில் நிலையம் உள்ளது. இங்கிருந்து*





இத்தலத்திற்குச் செல்லலாம். பேருந்து வசதியும் உள்ளது. மூலவர் அரங்க மன்னார் (வடபத்ரசாயி). தாயார் ஆண்டாள் (கோதை நாச்சியார்). பெரியாழ்வாரும் ஆண்டாளும் பிறந்த தலம். பெரியாழ்வாரும் ஆண்டாளும் பாடியுள்ளனர். ... மென்னடை

(வட திசை நாடு)

திருவேங்கடம் (திருப்பதி, திருமலை)

தமிழ் நாட்டிலிருந்ததும், பிற மாநிலங்களில் இருந்தும் பேருந்து மற்றும் இரயில் வசதி உள்ளது. திருப்பதியில் இரயில் நிலையம் உள்ளது.

கீழ்த் திருப்பதி இறைவர் பெயர் — கோவிந்தராஜப் பெருமாள். தாயார் — புண்டரீக வல்லி.

திருச்சானூர் :

அலர்மேல் மங்கைபுரம், அலர்மேல் மங்கை (பத்மாவதி). திருப்பதியில் இருந்து பேருந்து வசதி உண்டு.

திருமலை :

திருப்பதியில் இருந்து பேருந்து வசதி உள்ளது. மூலவர்: திருவேங்கட முடையான். ஸ்ரீநிவாசன், வெங்கடாஜலபதி, பாலாஜி.

ஆதி வாரகருக்கு என்று தனியே ஒரு சந்நிதி உள்ளது.

திருமலைக்கு 'ஏழுமலை' என்னும் பெயரும் இறைவனுக்கு 'ஏழு மலையான்' என்னும் பெயரும் உண்டு.

பெரியாழ்வார், குலசேகர ஆழ்வார், திருமழிசையாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார். நம்மாழ்வார் ஆகிய அழ்வார்களால் பாடப் பெற்றதலம். ஆண்டாள் பாடிய தலம்.

.... தையொரு திங்கள்

வடமதுரை (மதுரா —உத்திரப் பிரதேசம்)

பிருந்தாவனம், கோவர்த்தனமலை இத்தலத்தில் உள்ளன. தில்லியில் இருந்து ஆக்ரா போகும் இரயில்



*பாதையில் மதுரா சந்திப்பு உள்ளது. இங்கிருந்து 2 கல் தொலைவில் வடமதுரை உள்ளது. இங்கிருந்து பிருந்தாவனம் ஏழு கல் தூரம். பேருந்து வசதி உண்டு.*

*மூலவர் : கோவர்த்தனன், பாலகிருஷ்ணன். தாயார் : சத்யபாமா. மதுராவிலிருந்து சிறிதுதொலைவில் (சுமார் 2 கல்) கண்ணன் பிறந்த இடம் என்று கூறப்படும் தலம் உள்ளது.*

*<u>கோவர்த்தனமலை :</u>*

*மதுராவில் இருந்து சுமார் 8 கல் தூரத்தில் உள்ளது.*

*மேற்கூறப்பட்ட இடங்களுக்கு நடுநாயமாக விளங்கக்கூடிய இடம் பிருந்தாவனம்.*

*பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வர், திருமங்கை மன்னன், நம்மாழ்வார் ஆகியோர் பாடியுள்ளனர் ஆண்டாள் பாடிய தலம். .... மாயனை*

*<u>ஆயர்பாடி :</u>*

*(கோகுலம் —உத்திரப் பிரதேசம்) உத்திரப்பிரதேசம் மதுரா (மத்ரா) இரயில் நிலையச் சந்திப்பிலிருந்து பேருந்து வசதியுள்ளது.*

*மூலவர் : நவமோகன கிருஷ்ணன், தாயார் : ருக்மினி, சத்யபாமா,*

*பழைய கோகுலம் உள்ள இடத்தில் யமுனை ஆறு ஓடுகிறது.*

*பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் ஆண்டாள் பாடியுள்ளனர். ... நான் இனி*

*<u>துவாரகை (குஜராத் மாநிலம்)</u>*

*துவாராபதி, துவரைப்பதி என்னும் பெயர்களும் உள்ளன. மேற்குக் கடற்கரையில் உள்ள ஒரு தீவு.*

*பம்பாய், அகமதாபாத், இராஜ்கோட், ஜாம் நகர் வழியாக ஒகா துறைமுகத்திற்குச் செல்லும் இரயில்*

பாதையில் உள்ளது துவாரகா இரயில் நிலையம் 'அகமதாபாத்' என்னுமிடத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.

மூலவர் : கல்யான நாராயணர், த்வாரகாதீசன். தாயார் : கல்யாண நாச்சியார், ருக்மணி.

இங்குள்ள இறைவனை பெரியாழ்வார், திருமங்கை ஆழ்வார், திருமழிசை ஆழ்வார், நம்மாழ்வார் ஆகியோர் பாடியுள்ளனர். ஆண்டாள் பாடிய தலம். ....ஆவலன்பு

திருப்பாற்கடல் :

திருமாலின் இருப்பிடமாகக் கருதப்படும் இடம்

... வையத்து

* * *



# ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவை

## ஆண்டாள் தனியன்கள்

### உய்யக்கொண்டார் அருளிச் செய்தவை

அன்ன வயல்புதுவை ஆண்டாள் அரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம் — இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல். (அ)

<u>எளிய உரை</u> : அன்னப் பறவைகள் நிறைந்த வயல்கள் சூழ்ந்தது புதுவை (ஸ்ரீ வில்லி புத்தூர்). அந்த ஊரில் பிறந்த ஆண்டாள் பாடியருளிய பாசுரங்கள் திருப்பாவை. இப்பாசுரங்களை இனிய இசையில் பாடிப் பாக்களால் ஆகிய பாமாலையும், பூமாலையும் சூடிக் கொடுத்தாள் ஆண்டாள். இந்த ஆண்டாளின் புகழைச் சொல்லிப் பாடுவாயாக.

('புதுவை' — பழமையான ஊரை 'வில்லி' என்னும் பெயரையுடைய தலைவன் புதுப்பித்த காரணத்தால் 'வில்லி புத்தூர்' என்று ஆகியது)

சூடிக் கொடுத்த சுடர்கொடியே தொல்பாவை
பாடி அருளவல்ல பல்வளையாய் — நாடி நீ
வேங்கடவற்கு என்னை விதியென்ற இம்மாற்றம்
நாங்கடவா வண்ணமே நல்கு. (ஆ)

<u>எளிய உரை :</u> பூமாலைகளை முதலில் நீ அணிந்து அழகு பார்த்துப் பிறகு வில்லிபுத்தூரில் உள்ள இறைவனுக்குக் கொடுத்த ஒளி வீசும் கொடி போன்றவளே! பழமையான பாவை நோன்புக்கு உரிய பாசுரங்களைப் பாடி அருளியவளே! பல வளையல்களை அணிந்தவளே! "திருவேங்கடத்தில் கோயில் கொண்டுள்ள இறைவனுக்கு என்னைத் தருக" என்று நீ ஆராய்ந்து கூறினாய். நீ கூறிய சொல்லை நாங்கள் மீறாது பாவை நோன்பு நோற்க அருள் புரிவாயாக.

எட்டடி நாற்சீர் ஒருவிகற்பக்
கொச்சகக் கலிப்பா

*மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்*
*நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர் !*
*சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!*
*கூர்வேல் கொடுந் தொழிலன் நந்தகோ பன்குமரன்*
*ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்*
*கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்*
*நாராயணனே நமக்கே பறைதருவான்*
*பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்* (1)

<u>எளிய உரை :</u> சிறந்த அணிகலன்களை அணிந்த பெண்களே ! சிறப்புகள் மிகுந்த ஆயர்பாடியில் வாழும் செல்வச் சிறுமிகளே! இது மார்கழி மாதம். முழு நிலவு தோன்றும் பௌர்ணமி நாள். நீராட விரும்பி வரும் பெண்களே வாருங்கள்.

கூர்மையான வேலாயுதத்தை உடைய நந்த கோபன் – அழகான கண்களையுடைய யசோதை ஆகியோரின் மகன் கண்ணன். அவன் இளம் சிங்கத்தைப் போன்றவன். கரிய நிறம் உடையவன். சிவந்த கண்களையும் ஒளி வீசும் நிலவைப் போன்ற முகத்தையும் உடையவன். அவனே நாராயணன். அவன் நமக்கே பறையைத் தருவான். இந்த உலகத்தில் உள்ளவர்கள் நம்மைப் போற்றிப் புகழுமாறு நீராடுவோம் வாருங்கள்.

ஏல் ஓர் எம் பாவை – ஏலோரெம் பாவை. எம் பாவை என்னும் சொற்கள் பாவை நோன்பைக் குறிப்பவை.

*வையத்து வாழ்வீர்கள்! நாமும்நம் பாவைக்குச்*
*செய்யும் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்*
*பையத் துயின்ற பரம னடிபாடி*
*நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி*



*மையிட் டெழுதோம் மலரிட்டு நாம்முடியோம்*
*செய்யா தனசெய்யோம் தீக்குறளை சென்றோதோம்*
*ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி*
*உய்யுமா றெண்ணி உகந்தேலோ ரெம்பாவாய். (2)*

*(ஏற்கனவே பாவை நோன்பு நோற்று அனுபவம் உடைய பெண்கள், புதிதாக நோற்கும் பெண்களுக்குக் கூறியது)*

*<u>எளிய உரை :</u> இவ்வுலகில் வாழ்பவர்களே! நாம் நமது பாவை நோன்பில் பின்பற்ற வேண்டிய செயல் முறைகளைக் கேளுங்கள். பாற்கடலில் அழகாகக் கண் உறங்குகின்ற பரமனின் (திருமாலின்) திருவடிகளைப் பாட வேண்டும். நெய், பால் இவற்றை உண்ணக் கூடாது. விடியற்காலையில் எழுந்து நீராட வேண்டும். கண்களுக்கு மை தீட்டுதல் கூடாது. மலர்களைச் சூடிக்கொள்ளக் கூடாது. செய்யத்தகாத செயல்களைச் செய்ய மாட்டோம். சொல்லக் கூடாத சொற்களைச் சொல்ல மாட்டோம். நம்மால் முடிந்த உதவிகளைப் பிறருக்குச் செய்ய வேண்டும்.*

*ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி*
*நாங்கள் நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்*
*தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து*
*ஓங்குபெருஞ் செந்நெலூ டுகயலுகள*
*பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்*
*தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி*
*வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்*
*நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய். (3)*

*<u>எளிய உரை :</u> உயர்ந்த உருவம் எடுத்துக் கொண்டு உலகை தனது காலால் அளந்த உத்தமனுடைய பெயரைப் பாடி நமது பாவை நோன்பிற்காக நீராடுவோம். அவ்வாறு நீராடிப் பாவை நோன்பு நோற்றால் கிடைக்கும் நன்மைகள் பல. நாம்நமது ஊரில் நோற்கும் பாவை நோன்பின் பயனால் நாடு முழுவதும் மாதம் மூன்று மழை பொழியும். அதனால் வயலில்*

*நீர்வளம் பெருகி செந்நெல் ஓங்கி வளரும். அந்த நெற்பயிர்களுக்கு இடையில் மீன்கள் துள்ளி விளையாடும்.*

*மென்மையான குவளை (நெய்தல்) மலர்களில் புள்ளிகள் உடைய வண்டுகள் கண்ணுறங்கும். ஆயர்கள் வள்ளல் தன்மையுடைய பசுக்களின் மடியில் ஓயாமல் சுரக்கும் மார்பகத்தைப் பற்றிப் பால் குடங்களை நிறைப்பர். இவ்வளவு வளமை ஏற்படுவதால் நமது இல்லங்களில் நீங்காத செல்வம் நிறையும்.*

*இப்பாடலில் 'ஓங்கி உலகு அளந்த உத்தமன்' என்னும் சொற்றொடரில் திருமால் 'வாமனன்' என்னும் அவதாரம் எடுத்த கதை கூறப்பட்டுள்ளது.*

*'மகாபலி' என்னும் கொடுங்கோல் அரசனை ஆட்கொள்வதற்காகத் திருமால் குறுகிய உருவம் கொண்டு அவனது அரசவைக்கு அந்தணன் வேடத்தில் வந்தார். தவம் செய்வதற்குத் தனது காலால் அளக்கும் படி மூன்றடி நிலம் பெற்றார். நிலத்தை அளக்கும்போது திருமால் வானளாவிய உருவம் எடுத்து, நில உலகில் ஓர் அடியும், வானுலகில் ஓர் அடியும் அளந்து விட்டு, மூன்றாம் அடியை எங்கே வைப்பது என்று கேட்டார்.*

*மகாபலி மன்னன் மூன்றாம் அடியைத் தனது தலையில் வைத்து அளக்குமாறு வேண்டியனான். திருமால் அவ்வாறு செய்து மகாபலி மன்னனை ஆட்கொண்டார்.*

*ஆழி மழைக்கண்ணா! ஒன்று நீ கைகரவேல்*
*ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி*
*ஊழி முதல்வ னுருவம்போல் மெய்கறுத்துப்*
*பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்*
*ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து*
*தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்*
*வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்*
*மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். (4)*



<u>எளிய உரை :</u> கடல் போன்ற அகன்ற பரப்புடைய நீரைக் கொடுக்கக் கூடிய மழைக் கடவுளே! நீ எதனையும் மூடி மறைக்காதே. நீ கடலில் மூழ்கி நீரை முகந்து கொண்டு வானத்தை அடைய வேண்டும். படைப்புகள் எல்லாம் அழியும் காலத்தில்கூட தான் அழியாத முழுமுதற் பொருளைப் போலக் கரிய நிறமுடைய மேகமாக மாறவேண்டும். அழகான தோள்களையுடைய பத்மநாபனின் (திருமாலின்) ஒரு கையில் உள்ள சக்கரத்தைப் போல் மின்ன வேண்டும். மற்றொரு கையில் உள்ள வலம்புரிச் சங்கைப் போல ஓசை இட வேண்டும். திருமாலின் 'சாரங்கம்' என்று சொல்லக் கூடிய வில்லில் இருந்து புறப்படும் அம்பு போல நாங்கள் வாழ மழை பொழிவாயாக. நாங்கள் மார்கழி நீராடி மகிழ்வோம்.

| | | |
|---|---|---|
| கார்மேகம் | — | திருமாலின் கரிய தோற்றம் |
| மின்னல் | — | திருமாலின் சக்கரத்தின் ஒளி |
| அதிர்தல் (இடி) | — | திருமாலின் வலம்புரிச்சங்கின் ஒலி |
| மழை | — | திருமாலின் 'சாரங்கம்' என்னும் வில்லில் இருந்து புறப்படும் அம்புகள் |

மாயனை மன்னு வடமதுரை மைந்தனை
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும் மணிவிளக்கைத்
தாயைக் குடல்விளக்கம் செய்ததா மோதரனைத்
தூயோமாய் வந்துநாம் தூம்லர்தூ வித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய் (5)

<u>எளிய உரை :</u> மாயச் செயல்கள் செய்பவன். அவன் வடமதுரைக்குத் தலைவன். தூய்மையான பெரிய நீர்ப்பரப்பினையுடைய யமுனை ஆற்றின் கரையில் வாழ்பவன். ஆயர்களுடைய குடியிலே தோன்றிய அழகான விளக்கைப் போன்றவன்.

தன்னைப் பெற்றெடுத்த தேவகி, வளர்த்துவிட்ட

யசோதை ஆகியவர்களின் புகழை உலக மக்கள் அறியும்படிச் செய்தவன். அவன் தாமோதரன். அப்படிப்பட்ட இறைவனை நாம் தூய்மையானவர்களாக வந்து, தூயமலர்களைத் தூவித் தொழுதல் வேண்டும்.

அவனது புகழை வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க வேண்டும். அவ்வாறு செய்தால் ஏற்கனவே நாம் செய்த பிழைகளும் நெருப்பில் விழுந்த பஞ்சு போல மறைந்து விடும். ஆகவே அவனது சிறப்பைச் சொல்வோமாக.

தாமம் – மாலை, உதரன் – வயிற்றை உடையவன். தாமம் உதரன் – தாமோதரன் – மாலை சூடிய வயிற்றை உடையவன்.

புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ
பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி
வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரியென்ற பேரரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய். (6)

<u>எளிய உரை :</u> பெண்ணே! பொழுது விடிந்து விட்டதால் பறவைகளும் ஓசையிடத் தொடங்கி விட்டன. கருடனின் தலைவனாகிய திருமாலின் கோயிலில் இருந்து ஒலிக்கின்ற வெண்சங்கின் பேரொலியை நீ கேட்கவில்லையா? எழுந்திரு.

'பூதகி' என்னும் பேயின் மார்பில் இருந்து சுரந்த பாலை உண்டவன். சகடாசூரன் என்பவன் சக்கர வடிவில் வந்த போது தனது காலால் உதைத்துக் கொன்றவன். திருப்பாற்கடலில் பாம்புப் படுக்கையில் துயில் கொள்ளும் மூலப் பொருள். இவ்வளவு சிறப்புகள் உடைய இறைவனை முனிவர்களும் யோகிகளும் தூக்கம் கலைந்து மெள்ள எழுந்து 'அரி' என்று கூறும் பேரொலி உள்ளத்தில் புகுந்து குளிர்விக்கிறதே.



*நோன்புக்காக நீராடச் செல்லும் பெண்கள் பொழுது விடிந்தும் தூக்கத்திலிருந்து எழாத ஒரு பெண்ணிடம் கூறியததாக அமைந்துள்ளது. இப்பாடல் முதல் 'எல்லே இளங்கிளியே' என்னும் பாடல் முடிய உள்ள பத்துப் பாடல்களும் ஒரு தொகுப்பாக அமைந்துள்ளன. அதாவது மார்கழி நோன்புக்கு ஆயத்தமாகாமல் கண்ணுறங்கும் ஒரு பெண்ணிடம் பாடப் படுவதாக அமைந்துள்ளன இப்பாடல்கள்.*

*கீசுகீ சென்றெங்கும் ஆனைச்சாத் தன்கலந்து*
*பேசின பேச்சரவம் கேட்டிலையோ! பேய்ப்பெண்ணே*
*காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து*
*வாச நறுங்குழ லாய்ச்சியர் மத்தினால்*
*ஓசைப் படுத்தத் தயிரரவம் கேட்டிலையோ*
*-நாயகப் பெண்பிள்ளாய்! நாராயணன்மூர்த்தி*
*கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ*
*தேச முடையாய்! திறவேலோ ரெம்பாவாய்.* (7)

*<u>எளிய உரை :</u> பேய் போல் உறங்கும் பெண்ணே! ஆனைச்சாத்தன் என்று சொல்லச் கூடிய பறவைகள் ஒன்றுடன் ஒன்று கலந்து 'கீசு கீசு' என்று எங்கும் ஒலி எழுப்பிப் பேசிக் கொள்ளும் ஒலி உனது காதில் விழவில்லையா?*

*ஆயர்ப் பெண்கள், தாங்கள் அணிந்துள்ள காசு, பிறப்பு ஆகிய அணிகலன்கள் 'கலகல' என்று ஓசையை எழுப்பும்படி மத்தினால் தயிர் கடையும் ஓசையும் உனக்குக் கேட்கவில்லை? ஆயர்ப் பெண்களுக்கெல்லாம் நீ தலைவி என்று சொல்லிக் கொள்ளபவளே! நாராயணன் மூர்த்தியாகிய கேசவனை நாங்கள் பாடுகிறோம். அதைக் கேட்டும் படுக்கையிருந்து எழாமல் இருக்கிறாயோ? ஒளி வீசும் மேனியை உடையவளே! கதவைத் திறப்பாயாக.*

*கேசவன் — திருமாலின் ஒரு பெயர். 'கேசி' என்னும் ஓர் அரக்கனைக் கொன்ற காரணத்தால் இப்பெயர் ஏற்பட்டது.*





*கீழ்வானம் வெள்ளென்று எருமைச் சிறுவீடு*
*மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்*
*போவான்போ கின்றாரைப் போகாமல் காத்து உன்னைக்*
*கூவுவான் வந்து நின்றோம் கோது கலமுடைய*
*பாவாய்! எழுந்திராய் பாடிப் பறைகொண்டு*
*மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய*
*தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்*
*ஆவாவென்றாராய்ந் தருளேலோரெம்பாவாய்* (8)

*எளிய உரை :* நாரினால் கட்டப்பட்ட அணிகலன்களை அணிந்த பாவையே! கிழக்கு வானம் வெளுத்து விட்டது. எருமைகள் தங்கள் தொழுவத்திலிருந்து விடுதலை பெற்று மேய்ச்சலுக்காகக் கிளம்பிச் சென்றுவிட்டன. ஆயர்க் குலப் பெண்கள் பாவை நோன்புக்காகப் புறப்பட்டுச் சென்று விட்டார்கள். உன்னையும் அழைத்துச் செல்வதற்காக மற்ற பெண்களைப் போகவிடாமல் காக்க வைத்துள்ளோம். இப்போது உன்னைக் கூவி அழைத்துச் செல்வதற்காக வந்துள்ளோம். பெண்ணே! எழுவாயாக.

இசைக் கருவிகளுடன் அவனைப் பாடுவோம். குதிரை வடிவம் எடுத்துக் கொண்டு வந்த அரக்கனின் வாயைப் பிளந்தவனும், மல்யுத்தம் செய்ய வந்தவர்களைக் கொன்றவனுமாகிய, தேவர்களுக்கு எல்லாம் தேவனாகிய கண்ணனை நாம் வணங்கினால் நமது குறைகளைக் கேட்டு ஆராய்ந்து அருள் செய்வான்.

திருமால் கண்ணனாக அவதாரம் எடுத்து கோகுலத்தில் வளர்ந்த போது கம்சனால் அனுப்பப்பட்ட குதிரை வடிவம் கொண்டு வந்தவன் 'கேசி' என்னும் அரக்கன். கம்சனின் அழைப்பை ஏற்று வடமதுரைக்குச் சென்ற போது கண்ணனைக் கொல்ல மல்யுத்த வீரர்களைக் கம்சன் ஏற்பாடு செய்தான். அவர்களைக் கண்ணன் கொன்றான். இவ்விரு நிகழ்ச்சிகள் இப்பாடலில் இடம் பெற்றுள்ளன.



தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய
தூபங்கமழத் துயிலணைமேல் கண்வளரும்
மாமான் மகளே! மணிக்கதவம் தாள்திறவாய்
மாமீர்! அவளை எழுப்பீரோ உன்மகள்தான்
ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?
மாமாயன் மாதவன் வைகுந்த னென்றென்று
நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய் (9)

<u>எளிய உரை</u> : தூய்மையான மாணிக்கக் கற்களால் இழைக்கப்பட்ட மாளிகை. சுற்றிலும் விளக்குகள் எரிகின்றன. மணம் வீசும் புகை கமழ்கிறது. அங்குள்ள படுக்கையில் கண்ணுறங்கிக் கொண்டிருக்கின்ற மாமன் மகளே! மணிகள் கட்டப்பட்ட கதவின் தாழ்ப்பாளைத் திறப்பாயாக.

அத்தையே! உறங்கிக் கொண்டிருக்கின்ற உமது மகளை எழுப்ப மாட்டீர்களா? உமது மகள் ஊமையோ அல்லது செவிடோ? நீண்ட தூக்கம் கொள்கின்றாளோ?

'அளவற்ற மாயச் செயல்கள் செய்த மாதவனே! வைகுண்டத்தில் வாழ்பவனே!' என்று பலமுறை சொல்லிப் பாடுகிறோம். அத்தையே !அவளை எழுப்புங்கள்.

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்
மாற்றமும் தாராரோ? வாசல் திறவாதார்
நாற்றத் துழாய்முடி நாராயணன் நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்டொருநாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப கர்ணனும்
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ?
ஆற்ற அனந்த லுடையாய்! அருங்கலமே!
தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய். (10)

<u>எளிய உரை</u> : பாவை நோன்பு நோற்றுச் சுவர்க்ம் செல்ல நினைக்கின்ற பெண்ணே! வாசலைத் திறவாதவர் பதிலாவது சொல்லக் கூடாதா? மணம் வீசும் துளசி மாலையை (துழாய்

மாலை) தனது தலையிலே சூடியுள்ள நாராயணன் நாம் போற்றித் துதித்தால் அருள் செய்வதற்கு ஆயத்தமாக இருக்கிறான்.

முன்பு ஒரு நாள், புண்ணியவானாகிய இராமபிரானால் தோல்வி அடைந்தான் கும்பகர்ணன். அவனுக்குப் பிறகு அவனுக்கே உரிய பெருந் தூக்கத்தை உனக்கே கொடுத்து விட்டானோ?

நீண்ட உறக்கத்தில் ஆழ்ந்து விட்ட பெண்ணே! கிடைத்தற்கு அருமையான அணிகலன் போன்றவளே! உறக்கம் நீங்கிக் கதவைத் திறப்பாயாக.

(கும்பகர்ணன் – இலங்கை இராவணனின் தம்பி, நீண்ட காலம் தூங்குபவன்).

*கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து*
*சென்றார் திறலழியச் சென்று செருச்செய்யும்*
*குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே!*
*புற்றர வல்குல் புனமயிலே! போதராய்*
*சுற்றத்துத் தோழிமா ரெல்லாம் வந்துநின்*
*முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாட*
*சிற்றாதே பேசாதே செல்வப்பெண் டாட்டி! நீ*
*எற்றுக் குறங்கும் பொருளேலோ ரெம்பாவாய்* (11)

<u>எளிய உரை</u> : ஆயர்க்குலத்தினர் கன்றுகளையுடைய பசுக்களிடமிருந்து பால் கறப்பார்கள். குற்றமற்ற தொழில் அவர்களுடையது. இருப்பினும் வலிய வரும் பகைவர்களை போர் மேல் சென்று அவர்களின் வீரம் அழியும்படிச் செய்வார்கள். அப்படிப்பட்டவர்களின் குடும்பத்தில் பிறந்தவளே! பொன்னால் செய்யப்பட்ட கொடி போன்ற பெண்ணே !

புற்றில் வாழும் பாம்பின் படம் போன்ற அல்குலையும், காட்டில் வாழும் மயில் போன்ற சாயலையும் உடையவளே! செல்வக் குடியில் பிறந்த பெண்ணே ! எழுந்து வருவாயாக.



நாங்கள் சுற்றம் சூழ வந்து உனது வீட்டின் முற்றத்தில் புகுந்து கரிய மேகத்தின் நிறமுடைய கண்ணனின் பெயர் சொல்லிப் பாடுகிறோம். நீ சிறிதேனும் எங்களுடன் பேசாமல் உறங்குவதற்குப் பொருள் என்ன?

ஆயர்க்குடிப் பெண்கள் அனைவரும் தேடி வந்த பெண் செல்வக் குடியில் பிறந்தவள் என்பதும் தூக்கம் கலைந்தும் கதவைத் திறக்காமல் இருக்கிறாள் என்பதும் இப்பாடலில் இருந்து அறிய முடிகிறது. சுற்றத்தார் பலருடன் செல்வக் குடிப் பெண்ணின் வீட்டு முற்றம் தேடி வந்து கண்ணனைப் புகழ்ந்து பாடிய பாடலைக் கேட்டு அவள் மெய்ம்மறந்திருக்கலாம்.

*கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிறங்கி*
*நினைத்து முலைவழியே நின்று பால் சோர*
*நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்*
*பனித்தலை வீழநின் வாசற் கடைபற்றிச்*
*சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற*
*மனத்துக் கினியானைப் பாடவும்நீ வாய்திறவாய்*
*இனித்தா னெழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்*
*அனைத்தில்லத் தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய் (12)*

எளிய உரை : இளங்கன்றையுடைய எருமை தனது கன்றை அழைக்கும். கன்றுக்காக இரக்கப்பட்டுத் தனது மார்பின் வழியாகப் பால் சொறியும். அந்தப் பால் இடையர்களின் இல்லத்தை நனைத்துச் சேறாக்கும். அப்படிப்பட்ட நல்ல செல்வந்தனின் தங்கையே! மார்கழி மாதத்தின் பனி எங்கள் தலையில் விழ உனது வீட்டு வாசல் கதவைக் கையால் பிடித்துக் கொண்டு நிற்கிறோம்.

தனது கோபத்தால், தெற்குத் திசையிலுள்ள இலங்கைக்குத் தலைவனாகிய இராவணனைக் கொன்ற இராமனின் புகழை நாங்கள் பாடிக் கொண்டிருக்கும் போதும் நீ உனது வாயைத் திறக்காமல் இருக்கிறாய். இனிமேலாவது எழுந்திரு. இது என்ன பெரிய உறக்கம்? நாங்கள் உனது வீட்டின் முன் நின்று உன்னை அழைப்பது

எல்லா வீட்டுக்காரர்களுக்கும் தெரிந்து விட்டது.

(எருமையும் தனது கன்றுக்குட்டிக்காக இரக்கம் கொண்டு பால் சொரியும். ஆனால் மானிடப் பிறவியில் பிறந்து விட்ட உனக்கு எங்கள் மேல் இரக்கம் இல்லாமல் போய்விட்டதே என்று இடைக்குலப் பெண்கள் கூறுவதாக இப்பாடலில் மறைவான ஒரு பொருள் காணப்படுகிறது)

புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்
பிள்ளைக ளெல்லாரும் பாவைக் களம்புக்கார்
வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்றுப்
புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்
குள்ளக் குளிரக் குடைந்துநீ ராடாதே
பள்ளிக் கிடத்தியோ? பாவாய்! நீ நன்னாளால்
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய் (13)

<u>எளிய உரை</u> : இராமனாகப் பிறவி எடுத்த போது இலங்கை மன்னன் இராவணன் என்னும் அரக்கனின் தலையைக் கிள்ளி எறிந்தான். கண்ணனாகப் பிறவி எடுத்த போது தன்னைக் கொல்ல, ஒரு பறவை வடிவம் தாங்கி வந்த பகாசுரன் என்னும் அரக்கனின் வாயைக் கிழித்தான். இப்படிப்பட்ட புகழை எல்லாம் பாடி எல்லாப் பெண்களும் பாவை நோன்பு நோற்கும் இடத்திற்குச் சென்று விட்டார்கள். வியாழன் என்னும் கோள் மறைந்து (அஸ்தமித்து) விட்டது. வெள்ளி என்னும் கோள் உதயமாகி விட்டதை அறிவித்தது. புள்ளினங்களும் கூவுகின்றன.

மலரைப் போன்ற கண்களையுடையவளே! உனது கள்ளத்தனத்தை விட்டு விடு. இந்த நல்ல நாளில் எங்களுடன் சேர்த்து உடலும் உள்ளமும் குளிரும்படி நீரில் மூழ்கி நீராடாமல் படுக்கையில் கிடக்கிறாயோ?

உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பினகாண்
செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்



*எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்*
*நங்காய் ! எழுந்திராய் நாணாதாய் ! நாவுடையாய் !*
*சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்*
*பங்கயக் கண்ணானைப் பாடேலோ ரெம்பாவாய்* (14)

*எளிய உரை :* பெண்ணே! உங்கள் வீட்டின் பின் பக்கம் உள்ள தோட்டத்தில் இருக்கும் குளத்தில் செங்கழுநீர் (செவ்வாம்பல்) மலர்கள் இதழ்களை விரித்து மலர்ந்தன. ஆம்பல் மலர்கள் (அல்லி மலர்கள்) கூம்பிட்டன. போய்ப்பார். காவி நிறத்தில் தோய்த்துச் சாயம் ஏற்றப்பட்ட ஆடைகளை அணிந்து, வெண்மையான பற்களையுடைய முனிவர்கள் தங்கள் இருப்பிடத்திற்குச் சென்று சங்குகளை முழக்கிப் பொழுது விடிந்தது என்பதை அறிவிக்கப் புறப்பட்டு விட்டார்கள்.

"உங்களை நாளைக்கு நான் முன்னால் வந்து எழுப்புவேன்" என்று நேற்று நீ உனது வாயால் கூறினாயே. இப்போது நாங்கள் உன்னை வந்து எழுப்புகிறோம். வெட்கம் கெட்டது உனது நாக்கு. எழுந்திரு. சங்கும் சக்கரமும் ஏந்துகின்ற அகன்ற கைகளையும், தாமரை மலர் போன்ற கண்களையும் உடையவன் கண்ணன். தூக்கத்தில் இருந்து எழுந்து அவனைப் பாடு.

மாணிக்கவாசகரின் திருவெம்பாவை 6 ம் பாடலில் 'நாளைக்கு நானே வந்து உங்களை முன்னம் எழுப்புவேன்'. என்று ஒரு பெண் கூறுகிறாள். இந்த உரையாடலை இப்பாடலின் 'எங்களை முன்னம் எழுப்புவான் வாய் பேசும் நங்காய்' என்னும் உரையாடலுடன் ஒப்பிட்டுப் பார்த்து மகிழ்க.

*எல்லே இளங்கிளியே இன்னம் உறங்குதியோ*
*சில்லென் றழையேன்மின் நங்கைமீர் போதருகின்றேன்*
*வல்லைஉன் கட்டுரைகள் பண்டேஉன் வாயறிதும்*
*வல்லீர்கள் நீங்களே நானேதா னாயிடுக*
*ஒல்லைநீ போதாய் உனக்கென்ன வேறுடையை*
*எல்லாரும் போந்தாரோ? போந்தார்போந் தெண்ணிக்கொள்*
*வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க*
*வல்லானை மாயனைப் பாடேலோ ரெம்பாவாய்* (15)

*<u>எளிய உரை :</u> துயில் எழுப்ப வந்த பெண்கள்: ஏனடீ, இளமையான கிளி போன்ற பெண்ணே! இன்னுமா உறங்குகிறாய்?*

*துயில் நீங்கி எழாத பெண்: பெண்களே! சில் என்று கடுமையான சொற்களைக் கூறி எழுப்பாதீர்கள். இதோ புறப்பட்டுவிட்டேன்.*

*துயில் எழுப்ப வந்த பெண்கள்: வாய்ப்பேச்சில் வலிமையுடையவள்நீ. நீ உண்மையே பேசுவாய் என்பதை நாங்கள் முன்பே அறிவோம்.*

*துயில் நீங்கி எழாத பெண் : நீங்கள்தான் வாய்ப்பேச்சில் வலிமை உள்ளவர்கள். நீங்கள் கூறுவதுபோல நான் தான் பேச்சில் வலிமையுடையவள் என்றாலும் அப்படியே ஆகிவிட்டுப் போகிறேன்.*

*துயில் எழுப்ப வந்த பெண்கள் : எங்களிடம் உனக்கு என்ன மனவேறுபாடு? சீக்கிரம் வா.*

*துயில் நீங்கி எழாத பெண் : எல்லோரும் வந்து விட்டார்களா?*

*துயில் எழுப்ப வந்த பெண்கள் : வந்தவர்களை நீயே வந்து எண்ணிப் பார்த்துக் கொள். வலிமையான 'குவலாலயபீடம்' என்னும் யானையைக் கொன்றவன் கண்ணன். தீயவர்களை அழிக்கக் கூடிய ஆற்றல் பெற்றவன் அவன். மாயச் செயல்கள் செய்பவன். அவனை நினைத்துப்பாடிப் பாவை நோன்பு நோற்க விரைந்து வருவாயாக.*

*(இப்பாடலுடன் திருவாய்மொழி 4 —ஆம் பாடலில் தூக்கம் கலைந்து எழாத பெண், "வண்ணக்கிளி மொழியார் எல்லாரும் வந்தாரோ" என்று கேட்க, துயில் எழுப்ப வந்த பெண்கள், உள்ளவாறு சொல்லுகிறோம். வந்தவர்களை நீயே வந்து எண்ணிப் பார்த்துக் கொள்" என்று கூறுகிறார்கள். இரு பாடல் வரிகளிலும் உள்ள கருத்து ஒற்றுமையைக் காண்க.)*



*நாயக னாய்நின்ற நந்தகோ பனுடைய*
*கோயில் காப்பானே! கொடித்தோன் றும் தோரண*
*வாயில் காப்பானே! மணிக்கதவம் தாள்திறவாய்*
*ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை*
*மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்*
*தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்*
*வாயால் முன்னம்முன்னம் மாற்றாதே அம்மா நீ*
*நேய நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய்* (16)

*<u>எளிய உரை :</u> ஆயர்க்குடி மக்களுக்கெல்லாம் தலைவனாக இருக்கக் கூடியவன் நந்தகோபன். அவனது வீட்டிற்குக் காவலிருப்பவனே! கொடிகள் கட்டப்பட்ட தோரண வாயிலைக் காப்பவனே! மணிகளோடு கூடிய கதவின் தாழ்ப்பாளைத் திறப்பாயாக. மாயச் செயல்களைச் செய்யும் மணிவண்ணன் (கரிய நிறம் உடையவன்) எங்களை இன்று சந்தித்து ஆட்கொள்வதாக நேற்று கூறினான். அவனை தூக்கத்தில் இருந்து எழுப்பும் பொருட்டுத் திருப்பள்ளி எழுச்சியை நாங்கள் பாட வேண்டும். அதற்காக உடலும் உள்ளமும் தூய்மையாக வந்துள்ளோம். வாயில் காப்பவனே! முதல் முதலில் உனது வாயால் 'முடியாது' என்று மறுப்புச் சொல்லிவிடாதே. கண்ணன் வீட்டுக் கதவைத் திறப்பாயாக.*

*அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும்*
*எம்பெருமான்! நந்தகோ பாலா! எழுந்திராய்!*
*கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே! குலவிளக்கே!*
*எம்பெரு மாட்டி யசோதாய்! அறிவுறாய்*
*அம்பர மூடறுத் தோங்கி உலகளந்த*
*உம்பர்கோ மானே! உறங்காது எழுந்திராய்*
*செம்பொற் கழலடிச் செல்வா! பலதேவா!*
*உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய்* (17)

*<u>எளிய உரை :</u> உடுக்கும் உடை, குடிக்கும் தண்ணீர், உண்ணும் உணவு இவற்றை எளியவர்களுக்கு வழங்கும் உயர்ந்த மனம்*





*கொண்ட நந்த கோபாலா! நீ எங்கள் குலத்திற்குத் தலைவன். நீ தூக்கம் நீங்கி எழுந்திருப்பாயாக. கொழுகொம்பைப் போன்ற பெண்களுக்கெல்லாம் கொழுந்து போன்ற யசோதையே! நீ எங்களுக்குத் தலைவி அல்லவா. நீ உனது மகனாகிய கண்ணனை தூக்கம் கலைந்து எழும்படி அறிவுறுத்தமாட்டாயா? ஆகாயத்தின் வழியாக ஓங்கி வளர்ந்த வாமன அவதாரத்தில் உலகை அளந்த கண்ணனே! தேவர்களின் தலைவனே! உறக்கம் நீங்கித் துயில் எழுவாயாக. செம்பொன்னால் செய்யப்பட்ட வீரக்கழல் என்னும் அணிகலனை அணிந்த செல்வனே! பலதேவனே! உனது தம்பியாகிய கண்ணனும் நீயும் இனியும் கண்ணுறங்காமல் துயில் எழுவீர்களாக.*

*உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்*
*நந்தகோபாலன் மருமகளே! நப்பின்னாய்!*
*கந்தம் கமழும் குழலீ கடைதிறவாய்*
*வந்தெங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப்*
*பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்*
*பந்தார் விரலி உன் மைத்துனன் பேர்பாட*
*செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப*
*வந்து திறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்* *(18)*

*<u>எளிய உரை :</u> ஒரிடத்தில் நிற்காத மதம் பிடித்த யானையை உடையவன். பகைவர்களைக் கண்டு ஓடாத தோள் வலிமை உடையவன் நந்தகோபன். அப்படிப்பட்ட நந்தகோபனின் மருமகளாகிய நப்பின்னையே! மனம் கமழும் கூந்தலை உடையவளே! கதவைத் திறப்பாயாக. (நப்பினனை —கண்ணனின் மனைவி) பொழுது புலர்ந்ததற்கு அடையாளமாகக் கோழிகள் கூவும் சத்தம் கேட்கின்றது. குருக்கத்திப் பந்தலின் மேல் குயில்கள் பலமுறை விடாமல் கூவுகின்றன. பந்தாடுகின்ற விரல்களையுடையவளே! உனது கணவனாகிய கண்ணனின் பெயரை நாங்கள் பாடுகின்றோம். நீ உனது செந்தாமரை மலர் போன்ற வளையல்கள் ஒலிக்கும் கைகளால் மகிழ்ச்சியுடன் கதவைத் திறப்பாயாக.*



குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய்
மைத்தடங் கண்ணினாய்! நீ உன் மனாளனை
எத்தனை போதும் துயிலெழ வொட்டாய்காண்
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்
தத்துவ மன்று தகவேலோ ரெம்பாவாய் (19)

<u>எளிய உரை :</u> மணிமாலை அணிந்த கண்ணனே! குத்து விளக்கு எரிகிறது. யானைத் தந்தத்தால் செய்யப்பட்ட கால்களையுடைய கட்டிலில் போடப்பட்ட ஐந்து விதமான குணங்களையுடைய படுக்கையில் படுத்திருக்கிறாய். நீ கொத்தான மலர்கள் சூடிய உனது துணைவியாகிய நப்பின்னையின் மார்பகங்களைத் தழுவிக் கொண்டிருக்கிறாய். வாய் திறந்து எங்களுடன் பேசமாட்டாயா? மை தீட்டப்பட்ட அகன்ற கண்களையுடைய நப்பின்னையே! உனது மனாளனை விடிந்து எவ்வளவு நேரம் ஆனாலும் தூக்கத்தில் இருந்து எழும்படி விடமாட்டாய். அவனை நீ சிறிது நேரம் கூடப் பிரிந்திருக்க மாட்டாயா? நாங்கள் கூறுவது தத்துவம் அல்ல. உனக்குத் தகுதியான செயலைச் செய்வாயாக. (படுக்கையின் ஐந்து குணங்களாவன : அழகு, குளிர்ச்சி, மென்மை, நறுமணம், வெண்மை நிறம்.)

முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே! துயிலெழாய்
செப்பமுடையாய்! திறலுடையாய்! செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா! துயிலெழாய்
செப்பன்ன மென்முலை செவ்வாய்
நப்பின்னை நங்காய் திருவே! துயிலெழாய்
உக்கமும் தட்டொளியும் தந்து உன் மனாளனை
இப்போதே எம்மைநீ ராட்டேலோ ரெம்பாவாய் (20)

<u>எளிய உரை :</u> தேவர்கள் முப்பத்து மூன்று கோடிபேர். அவர்களுக்கு ஏதேனும் துன்பம் நேருவதற்கு முன்பு நீ

*ஓடிச்சென்று அவர்களின் துன்பத்தைப் போக்குவாய் அல்லவா. நடுநிலைமையும் வீரமும் உடையவனே. பகைவர்களுக்கு வெப்பத்தைக் கொடுப்பவனே! துயில் நீங்கி எழுவாயாக. கலசத்தைப் போன்ற மார்பினையும் சிவந்த வாயினையும், சிறுத்த இடுப்பையும் உடைய நப்பின்னையே ! திருமகளே! உறக்கம் நீங்கி எழுவாயாக. பாவை நோன்புக்கு உரிய பொருள்களாகிய விசிறி, முகம் பார்க்கும் கண்ணாடி இவற்றையும் உனது மனாளனையும் எமக்குக் கொடு. எம்மை இப்போதே நீராட்டுவாயாக.*

*ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப*
*மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்*
*ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுறாய்*
*ஊற்ற முடையாய்! பெரியாய்! உலகினில்*
*தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய்*
*மாற்றார் உனக்கு வலிதொலைந்து உன் வாசல்கண்*
*ஆற்றாது வந்துஉன் னடிபணியு மாபோலே*
*போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பாவாய் (21)*

*<u>எளிய உரை :</u> பால் கறக்கும்போது அதை ஏற்றுக் கொள்ளும் பால் கலயங்கள் நிறைந்து பொங்கி வழியும். பால் கறக்க மறுக்காத வள்ளல் தன்மையுடைய பெரும் பசுக்கூட்டத்தையுடைய நந்தகோபாலனின் மகனே! துயில் நீங்குவாயாக. வலிமையும் உயர்ந்த தோற்றமும் உடையவனே! உலகில் காணும் பொருள்களின் வடிவமாய் இருப்பவனேன! ஒளி வடிவானவனே! உனது பகைவர்கள் உன்னிடம் தோற்று, வலிமை எல்லாம் இழந்து உனது வாசலுக்கு வந்து வேறு வழி இல்லாமல் உனது பாதங்களில் விழுந்து கிடப்பார்கள். உனது புகழைப் பாட வந்தோம்.*

*அங்கன்மா ஞாலத் தரசர் அபிமான*
*பங்கமாய் வந்துநின் பள்ளிக் கட்டிற்கீழே*
*சங்க மிருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்*
*கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே*



*செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ?*
*திங்களும் ஆதித் தியனும் எழுந்தாற்போல்*
*அங்க ணிரண்டும் கொண்டு எங்கள்மேல் நோக்குதியேல்*
*எங்கள்மேல் சாபம் இழந்தேலோ ரெம்பாவாய்* (22)

*__எளிய உரை :__ அழகான இந்த நிலவுலகிலுள்ள அரசர்கள் எல்லோரும் உன்மேல் அன்பு செலுத்தி வந்து உனது அரியணையின் கீழ் கூட்டமாய் இருப்பது போல நாங்கள் உனது இல்லம் தேடி வந்து கூடிவிட்டோம். மலர்ந்தும் மலராத நிலையிலுள்ள தாமரைப் பூப்போன்ற உனது கண்களின் பார்வை எங்கள் மேல் சிறிதுபடாதோ? வெண்ணிலவும் கதிரவனும் ஒரே நேரத்தில் உதயமாவது போல உனது இரு கண்களாலும் எங்களை நீ பார்த்தாயானால் எங்களைப் பிடித்த சாபங்கள் மறைந்து விடும்.*

*மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்*
*சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து*
*வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி*
*மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்*
*போதருமா போலே நீ பூவைப்பூ வண்ணா! உன்*
*கோயில்நின் று இங்ஙனே போந்தருளி கோப்புடைய*
*சீரிய சீங்கா தனத்து இருந்து யாம்வந்த*
*காரியம் ஆராய்ந்த தருளேலோ ரெம்பாவாய்* (23)

*__எளிய உரை :__ அது மழைக்காலம். மலையில் உள்ள ஒரு குகை. மழைக்காலம் ஆதலால் வெளியே வர முடியாமல் நீண்ட காலம் அந்தக் குகையிலே கிடக்கிறது ஒரு வீரமுடைய சிங்கம். மழைக்காலம் நீங்கிய பிறகு அந்தச் சிங்கம் தனது இரைதேடும் கடமையை உணர்கிறது. தீப்பொறி பாய்வது போலத் தனது கண்களைத் திறக்கிறது. தனது பிடரி மயிர் சிலிர்க்க, நான்கு திசைகளிலும் பெயர்ந்து சென்று தனது உடம்பை உதறி, சோம்பல் முறித்துக் கர்ச்சனை எழுப்பிக் கொண்டு புறப்படுகிறது. மேற்குறிப்பிட்ட சிங்கத்தைப் போல், காயாம் பூவினைப் போன்ற நிறமுடையவனே! உனது இல்லத்திலிருந்து நாங்கள் இருக்கும் இடத்திற்கு வந்து அழகிய அரியணையில் அமர்வாயாக. அவ்வாறு*

அமர்ந்து நாங்கள் உன்னிடம் வந்த காரியம் என்ன என்பதை ஆராய்ந்து எங்களுக்கு அருள் செய்வாயாக.

அன்று இவ் வுலகம் அளந்தாய்! அடிபோற்றி
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்! திறல்போற்றி
பொன்றச் சகடம் உதைத்தாய்! கழல்போற்றி
கன்று குணிலா எறிந்தாய்! குணம்போற்றி
குன்று குடையா வெடுத்தாய்! குணம் போற்றி
வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி
என்றென்றும் சேவகமே ஏத்திப் பறைகொள்வான்
இன்றுயாம் வந்தோம் இரங்கேலோ ரெம்பாவாய் (24)

எளிய உரை : அன்று (வாமன அவதாரம் எடுத்த போது) இவ்வுலகை அளந்தவனே! உனது திருவடிகளை வணங்குகிறோம். சக்கர வடிவம் தாங்கிக் கொண்டு உன்னைக் கொல்ல வந்த 'சகடாசுரனை' உதைத்தாய். உனது புகழை வணங்குகிறோம். கன்று வடிவில் வந்த 'வத்சாசூரனை' வெறும் தடியால் அடித்துக் கொன்றாய். 'கோவர்த்தனம்' என்னும் மலையைக் குடையாகத் தூக்கியவனே! உனது குணங்களை வணங்குகிறோம். பகைவர்களை வென்று அவர்களை அழிக்கின்ற உனது கையில் இருக்கும் வேலாயுதத்தை வணங்குகிறோம் என்று கூறி வணங்கி உனக்குப் பணிவிடைகள் செய்து அருளைப் (பறை) பெறுவதற்காகவே நாங்கள் இங்கு வந்துள்ளோம். எங்கள் மேல மனம் இரங்குவாயாக.

ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்
ஒருத்தி மகனாய் ஒளிந்து வளரத்
தரிக்கிலா னாகித் தான்தீங்கு நினைத்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே! உன்னை
அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில்
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய் (25)



<u>எளிய உரை :</u> *கம்சனின் சிறையில் இருந்த வசுதேவனின் மனைவி ஆகிய தேவகிக்கு நீ மகனாய்ப் பிறந்தாய். அதே இரவில் ஆயர்பாடியில் இருந்த நந்தகோபனின் மனைவி யசோதையிடம் வந்து சேர்ந்து மகனாக மறைந்து வளர்த்தாய். இதைத் தாங்கிக் கொள்ள முடியாத கம்சன் உனக்குத் தீங்கு செய்ய நினைத்தான். அவனது தீய எண்ணத்தை அழித்து அவன் நெஞ்சில் நீ நெருப்பாக நின்றாய். நெடுமாலே! உன்னிடம் ஒன்றைக் கேட்டுப் பெறுவதற்காகவே நாங்கள் இங்கு வந்துள்ளோம். நீ எங்களுக்கு அருள் செய்வாயானால் திருமகளுக்கு உரிய உனது செல்வத்தையும் அடியார்களுக்கு ஆற்றிய உனது தொண்டினையும் நாங்கள் பாடுவோம். வருத்தம் தீர்ந்து மகிழ்ச்சி அடைவோம்.*

*மாலே! மணிவண்ணா! மார்கழி நீ ராடுவான்*
*மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்*
*ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன*
*பாலன்ன வண்ணத்துஉன் பாஞ்ச சன்னியமே*
*போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே*
*சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே*
*கோல விளக்கே! கொடியே! விதானமே!*
*ஆலி னிலையாய்! அருளேலோ ரெம்பாவாய்* (26)

<u>எளிய உரை :</u> *திருமாலே! மணிவண்ணனே! ஊழிக் காலத்தில் ஆலமரத்தின் இலையில் குழந்தையாகப் பள்ளி கொள்பவனே! மார்கழி மாதத்தில் நோன்பு நோற்கும் முறையைப் பற்றி முன்னோர்கள் சொன்னவற்றை நாங்கள் உனக்குக் கூறுகிறோம். உலகங்களை எல்லாம் நடுங்க வைக்கும் பாலின் நிறமுடைய வெண்மையான 'பாஞ்சசன்னியம்' உனது சங்கு. அப்படிப்பட்ட சங்கை முழக்கி ஒலி எழுப்புவார்கள். பெரிய இசைக் கருவிகளை முழக்கி நீ பல்லாண்டுகள் வாழ்க என்று பாடுவார்கள். அழகிய விளக்கையும் கொடிகளையும் (தோரணங்கள்) விதானத்தில் கட்டுவதற்கான பொருள்களையும் எமக்குத் தந்து அருள்புரிவாயாக. (விதானம் — பந்தலின் மேற்பகுதி).*





*கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா உன்தன்னை*
*பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம்*
*நாடு புகழும் பரிசினால் நன்றாகச்*
*சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே*
*பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணிவோம்*
*ஆடை யுடுப்போம் அதன்பின்னே பாற்சோறு*
*மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்*
*கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்* (27)

*எளிய உரை :* நல் வழிக்கு வராதவர்களை வெல்லுகின்ற சிறப்புகளை உடைய கோவிந்தா! உன்னைப் பாடி அருளைப் பெறுவோம். உன்னிடமிருந்து நாங்கள் பெறும் சன்மானப் பொருள் என்ன தெரியுமா? நாட்டு மக்கள் வியக்கும் வளையல்கள் (சூடகம்) தோள்களில் அணியும் தோள்வளை, காதில் அணியும் தோடுகள் மற்றும் பூக்கள், பெண்கள் கால்களில் அணியும் அணிகலன்கள் மற்றும் இவை போன்ற பல அணிகலன்கள். இவற்றை நாங்கள் அணிவோம். நீ எங்களுக்குத் தரும் ஆடைகளை உடுத்திக் கொள்வோம். அதன் பிறகு நெய்யில் முழ்கடிக்கப் பட்ட பால் சோறு உண்போம். அளவுக்கு அதிகமான நெய் ஊற்றப்பட்ட பால் சோறு கைகளால் எடுத்து உண்ணும் போது அந்தச் சோற்றில் உள்ள நெய் எங்கள் முழங்கைகளின் வழியாக வழிந்து வரும். உன்னிடமிருந்து இத்தனைச் சிறப்புகள் பெற்ற நாங்கள் கொண்டாடும் பாவை நோன்பில் நீயும் கலந்து கொண்டு உள்ளம் குளிர்வாயாக.

இப்பாடலில் நெய்யில் முழ்கடிக்கப்பட்ட பால் சோறு உண்போம். பல விதமான அணிகலன்களை அணிவோம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இவை முன்னுக்குப் பின் முரணாக உள்ளன என்று சிலர் நினைக்கலாம். அது சரியல்ல. இவை இவை செய்யமாட்டோம் என்று கூறியது பாவை நோன்பு நோற்கும் காலத்தில், இவை இவை செய்வோம் என்று குறிப்பிட்டது பாவை நோன்பின் முடிவில் என்று பொருள் கொள்ள வேண்டும்.

*கறவைகள் பின்சென்று கானம்சேர்ந் துண்போம்*
*அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்து உன்தன்னைப்*
*பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்*
*குறைவொன்று மில்லாத கோவிந்தா! உன்தன்னோடு*



உறவேல் நமக்குஇங்கு ஒழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்
சிறுபே ரழைத்தனவும் சீறி யருளாதே
இறைவா! நீ தாராய் பறையேலோ ரெம்பாவாய் (28)

<u>எளிய உரை :</u> குறைபாடுகள் எதுவும் இல்லா கோவிந்தா! இடையர்க் குலத்தில் பிறந்த நாங்கள் பால் பசுக்களை மேய்ப்பதற்காக அவற்றின் பின்னால் காடு நோக்கிச் செல்வோம். உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்றும் வேறுபாடு இல்லாமல் எல்லோரும் சேர்த்து உண்போம். கொஞ்சம் கூடக் கள்ளமில்லாத ஆயர்குலத்தில் வந்து நீ பிறந்தாய். அதற்காக நாங்கள் புண்ணியம் செய்து உள்ளோம். இறைவனே! உனக்கும் எங்களுக்கும் உள்ள நட்பு யாராலும் பிரிக்க முடியாதது. நாங்கள் ஏதும் அறியாத பிள்ளைகள். உன்மேல் கொண்ட அன்பின் காரணமாகத்தான் உன்னை பெயர்சொல்லி அழைத்துவிட்டோம். இதற்காக எங்கள் மேல் கோபத்தைக் காட்டாமல் உனது அருளைத் தருவாயாக. (கோவிந்தன் – பசுக்களைக் காப்பவன்.)

சிற்றஞ் சிறுகாலே வந்துஉன்னைச் சேவித்து உன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றம்மேய்த் துண்ணும் குலத்தில் பிறந்து நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப் பறைகொள்வா னன்றுகாண் கோவிந்தா
இற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய் (29)

<u>எளிய உரை :</u> கோவிந்தா! இந்த இளங்காலை நேரத்தில் உன்னைத் தேடி வந்து உனது பொற்றாமரை மலர்களைப் போன்ற திருவடிகளை வணங்குவதன் காரணத்தைச் சொல்லுகிறோம். கேட்பாயாக. பசுக்களை மேய்த்து அவற்றால் கிடைக்கும் பொருள்களைக் கொண்டு எளிய வாழ்க்கையை நடத்துகிறோம் நாங்கள். நீ எங்களின் குலத்தில்வந்து பிறந்து விட்டாய். அப்படி இருக்கும்போது உனக்கு நாங்கள் செய்யும் சிறிய பணிவிடைகளை ஏற்றுக் கொள்ளாமல் இருக்கக் கூடாது. இன்று நாங்கள் ஒன்றாகக்

கூடி வந்து வணங்கிய காரணம், நீ அருள் செய்யும் மோட்ச உலகை விரும்பி அல்ல. ஏழு ஏழு பிறவிகளிலும் என்றைக்கும் உன்னுடன் நட்பு கொண்டு உனது அருகில் இருந்து உனக்கே நாங்கள் தொண்டு செய்ய விரும்புகிறோம். எங்கள் மனங்களில் இருக்கும் தீய எண்ணங்களை நீக்கி அருள் செய்வாயாக.

*வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனைத்*
*திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி*
*அங்கப் பறைகொண்டவாற்றை அணிபுதுவைப்*
*பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதை சொன்ன*
*சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே*
*இங்கிப் பரிசுரைப்பார் ஈரிரண்டு மால்வரைத்தோள்*
*செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்*
*எங்கும் திருவருள்பெற்று இன்புறுவ ரெம்பாவாய் (30)*

எளிய உரை : தேவர்களுக்காக அமிர்தம் எடுக்கும் பொருட்டு அலை வீசுகின்ற கடலைக் கடைந்தவன் கண்ணன். கேசி என்னும் அசுரக் குதிரையைக் கொன்றதால் அவனுக்குக் கேசவன் என்னும் பெயரும் உண்டு. அவனை நிலவைப் போன்ற முகமுடைய பெண்கள் போய் வணங்கி அங்கு அவனது அருளைப் பெற்றார்கள். இவ்வாறு பசுமையான தாமரை மலர் மாலைகள் தொடுக்கும் (பட்டர்பிரான்) பெரியாழ்வாரின் கோதையாகிய ஆண்டாள் சங்கத் தமிழால் ஆகிய முப்பது பாடல்களில் கூறினாள். இந்த முப்பது பாசுரங்களையும் தவறாமல் ஓதுபவர்கள் நான்கு தோள்களையும் சிவந்த கண்களையும் அழகான முகத்தையும் உடைய திருமாலின் அருள் பெற்று என்றும் மகிழ்ச்சியுடன் வாழ்வார்கள்.

வங்கம் — அலை, கப்பல், பறை — அருள், பறை என்பதை சிலர் இசைக்கருவி என்று பொருள் கொள்வது பொருத்தமாக இல்லை. கண்ணனிடம் இருந்து ஓர் இசைக்கருவியைப் பெற இவ்வளவு நோன்பு இருக்க வேண்டிய அவசியம் இல்லை அல்லவா.

*ஆண்டாள் திருவடிகளே சரணம்.*

*திருப்பாவை எளிய உரை முற்றுப் பெற்றது.*

❋



# ஆண்டாள் அருளிச் செய்த நாச்சியார் திருமொழி

## தனியன்

*திருக்கண்ணமங்கையாண்டான் அருளிச் செய்தது*

இரு விகற்ப நேரிசை வெண்பா

*அல்லிநாள் தாமரைமேல் ஆரணங்கின் இன் துணைவி*
*மல்லிநா டாண்ட மடமயில் – மெல்லியலாள்*
*ஆயர்குல வேந்த னாகத்தாள் தென்புதுவை*
*வேயர் பயந்த விளக்கு*

*கட்டளைக் கலித்துறை*

*கோலச் சுரிசங்கை மாயன் செவ்வாயின் குணம் வினவும்*
*சீலத்தனள் தென்திரு மல்லிநாடி செழுங்குழல் மேல்*
*மாலைத் தொடை தென்னரங்கருக்கீயும் மதிப்புடைய*
*சோலைக்கிளி அவள் தூய நற்பாதம் துணைநமக்கே*

*மேற்காணும் தனியன்களின் பொருள்:*

*அன்றலர்ந்த தாமரைமலரில் அமர்ந்திருக்கும் ஆரணங்காகிய திருமகளின் இனிய துணைவி 'மல்லி' என்றும் நாட்டினை ஆண்ட மயில் போன்ற சாயலை உடையவள். மென்மையானவள், ஆயர் குல வேந்தனாகிய கண்ணனின் நெஞ்சில் இருப்பவள். தென்புதுவை என்று அழைக்கப்படும் வில்லிபுத்தூரில் வாழும் பெரியாழ்வாருடைய (விட்டு சித்தருடைய) குல விளக்கு ஆவாள் (ஆண்டாள்).*

*அழகிய சங்கை தனது கைகளில் ஏந்திய மாயவனாகிய திருமாளின் செவ்வாயின் குணங்களைப் பிறரிடம் கேட்டறியும் ஒழுக்கமுடையவள். தென் திசையில் செழுமையான தனது கூந்தலின் மேல் சூடிய மாலையை அரங்க நாதருக்குக் கொடுக்கும் மதிப்பு மிக்கவள். அவளது (ஆண்டாள்) தூய நல்ல பாதங்கள் நமக்கு என்றும் துணை ஆகட்டும்.*

*வில்லிபுத்தூரின் பழைய பெயர் 'மல்லி நாடு' என்பதாகும்.*

*வேடர் குலத்தில் பிறந்த 'மல்லி' என்பவளுடைய பெயரால் அமைந்த ஊர் அது. அவ்வூரின் அருகில் கொஞ்சம்புத்தூர் என்னும் ஊர் இருந்தது. 'மல்லி' என்பவளின் மகன்களில் ஒருவன் 'வில்லி' மற்றொருவன் கண்டன். இவர்கள் வேடர்களின் தலைவராக இருந்தார்கள்.*

*வில்லியும், கண்டனும் காட்டிலிருந்த ஓர் ஆலமரத்தின் அடியில் திருமாலின் திருவுருவம் ஒன்றைக் கண்டெடுத்து அங்கு கோயில் எழுப்பினார்கள். பிறகு கொஞ்சம்புத்தூரிலிருந்து அந்தணர்களை அழைத்து வந்து அங்கு குடியேற்றினார்கள் அவர்கள் அந்த இடத்திற்கு 'வில்லி' என்னும் வேடனின் பெயரையும், தங்கள் ஊரான 'கொஞ்சம் புத்தூர்' என்னும் பெயரில் உள்ள புத்தூர் என்றும் சொல்லையும் சேர்த்து 'வில்லி புத்தூர்' என்று புதிய பெயரைச் சூட்டினார்கள்.*

*ஒன்றாம் திருமொழி – தையொரு திங்களும்*

*(இப்பகுதியில் ஆண்டாள் பாடிய பத்து பாடல்கள் அமைந்துள்ளன. காம உணர்வு மிகுந்த ஒரு பெண், தன்னை கண்ணனிடம் கொண்டு சேர்க்கும்படி காமக்கடவுளாகிய மன்மதனிடம் வேண்டுவது போல அமைந்துள்ளன இப்பாடல்கள்).*

*அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*
*சாவேரி இராகம் – ஆதி தாளம்*

*தையொரு திங்களும் தரை விளக்கித்*
*தண்மண்டல மிட்டு மாசி முன்னாள்*
*ஐய நுண் மணற்கொண்டு தெருவணிந்து*
*அழகினுக் கலங்கரித்து அணங்க தேவா*
*உய்யவு மாங்கொலோ என்று சொல்லி*
*உன்னையும் உம்பியையும் தொழுதேன்*
*வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை*
*வேங்கடவற்கு என்னை விதிக்கிற்றியே* (1)



<u>எளிய உரை :</u> மன்மதக் கடவுளே! உன்னையும் உனது தம்பியையும் தொழுதேன். தைமாதம் முழுவதும் தரையை விளக்கித் தூய்மை செய்தேன். மாசிமாதம் முதல் நாள் நுண்ணிய மணலைக் கொண்டு தெருவை அலங்கரித்தேன். காதல் நோயினால் கண்ணனை நினைத்துத் துன்பம் அடைகிறேன். இந்நோயிலிருந்து மீள்வேனா? மன்மதனே! கொடிய நெருப்பைச் சிந்துகின்ற சக்கரத்தை ஏந்திய வேங்கடவனிடம் என்னைச் சேர்ப்பிப்பாயாக.

வெள்ளை நுண் மணற்கொண்டு தெருவணிந்து
வெள்வரைப் பதன்முன்னம் துறைபடிந்து
முள்ளுமில்லாச் சுள்ளி எரிமடுத்து
முயன் றுஉன்னை நோற்கின்றேன் காமதேவா!
கள்ளவிழ்பூங் கணைதொடுத் துக்கொண்டு
கடல்வண்ண னென்பதோர் பேரெழுதி
புள்ளினை வாய்பிளந்தா னென்பதோர்
இலக்கினில் புகஎன்னை எய்கிற்றியே (2)

<u>எளிய உரை :</u> காமதேவனே! வெள்ளை நிறமுள்ள மணல் கொண்டுவரச் செய்து தெரு முழுவதும் பரப்பிடச் செய்தேன். வெள்ளி முளைப்பதற்கு முன்பு எழுந்து நீர்த்துறைக்குச் சென்று நீராடினேன். முள் இல்லாத சுள்ளிகளைக் கொண்டு தீ மூட்டினேன். இவ்வாறு மிகவும் என்னை வருத்திக் கொண்டு உன்னை நினைத்து நான் நோன்பு நோற்கிறேன். தேன் சிந்துகின்ற மலர்களால் ஆகிய அம்பைத் தொடுத்துக் கொண்டு அந்த அம்பில் 'கடல் வண்ணன்' என்னும் பெயரை எழுதிக் கொள். பறவையின் வாயைப் பிளந்து அதைக் கொன்றவனாகிய கண்ணனை அடைய வேண்டும் என்பதையே நான் நோக்கமாகக் கொண்டுள்ளேன். அவனிடம் என்னைச் சேர்ப்பாயாக.

(மன்மதனின்வில் கரும்பினால் செய்யப்பட்டது. ஐந்து வகையான மலர்களே அவனது அம்புகள். அவை தாமரை, அசோகம், மா, முல்லை, கருங்குவளை.)

மத்தநன் னறுமலர் முருக்க மலர்கொண்டு
முப்போதும் உன்னடி வணங்கி
தத்துவ மிலியென்று நெஞ்செரிந்து
வாசகத் தழித்துன்னை வைதிடாமே





*கொத்தலர் பூங்கணை தொடுத்துக் கொண்டு*
*கோவிந்த னென்பதோர் பேரெழுதி*
*வித்தகன் வேங்கட வாணனென்னும்*
*இலக்கினில் புகஎன்னை விதிக்கிற்றியே* (3)

*எளிய உரை :* மகரந்தம் நிறைந்த, நல்ல முருக்க மலர்களைக் கொண்டு மூன்று வேளைகளும் உனது பாதங்களை வணங்கினேன். நீ என்மேல் கிரக்கம் காட்டாவிட்டால் எனது உண்மையான நிலையை அறியாதவன் என்று உன்னை நான் வசைபாட வேண்டியது வரும். அந்நிலை ஏற்படுவதற்கு முன்பு, கொத்தான மலர்களை அம்புளாக்கிக் கொள். அந்த அம்புகளில் கோவிந்தன் என்னும் பெயரை எழுதிக் கொள். அறிவே வடிவான வேங்கட வாணனென்னும் இலக்கை நான் அடைய எனக்கு அருள் செய்வாயாக.

*சுவரில் புராண! நின் பேரெழுதிச்*
*சுறவநற் கொடிக்களும் துரங்கங்களும்*
*கவரிப் பிணாக்குகளும் கருப்புவில்லும்*
*காட்டித் தந்தேன் காமதேவா!*
*அவரைப் பிராயம் தொடங்கி என்றும்*
*ஆதரித் தெழுந்த என் தடமுலைகள்*
*துவரைப் பிரானுக்கே சங்கற்பித்துத்*
*தொழுது வைத்தேன் ஒல்லை விதிக்கிற்றியே* (4)

*எளிய உரை :* காலம் கணக்கிட முடியாத பழமையான மன்மதனே! கவரியும், குதிரைகளும், மகரமீன் கொடிகளும், கரும்பு வில்லும் உனக்குக் காட்டி உன்னை வழிபட்டேன். நீ கண்டாயா? காமதேவனே! நான் பருவடைந்த நாள் தொடங்கி நன்கு வளர்ந்துள்ளன என் மார்பகங்கள். அவை துவாரகைப் பிரானுக்காவே என்று மனதில் உறுதி பூண்டிருக்கிறேன். இச்செய்தியை அவரிடம் சென்று கூறுவாயாக.

*வானிடை வாழும் அவ்வானவர்க்கு*
*மறையவர் வேள்வியில் வகுத்தஅவி*
*கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து*
*கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப*



ஊனிடை யாழிசங்கு உத்தமர்கென் று
உன்னித் தெழுந்தஎன் தடமுலைகள்
மானிடவர்க் கென் று பேச்சுப்படில்
வாழகில் லேன்கண்டாய் மன்மதனே! (5)

<u>எளிய உரை :</u> மன்மதனே! வானில் வாழும் தேவர்களுக்கு என் று அந்தணர்கள் யாகத்திற்காக வைத்திருக்கும் அவி உணவை உண்ண காட்டில் திரியும் ஒரு நரி சமயம் பார்த்திருப்பதும் மோந்து பார்ப்பதும் சரியல்ல அல்லவா. அதுபோல்தான் சங்கு சக்கரம் இவற்றுடன் கூடிய நற் குணங்கள் நிரம்பப் பெற்ற உத்தமர்க்காகப் புடைத்து வளர்ந்துள்ள என்று அகன்ற மார்பகங்கள் மானிடருக்காக என்ற பேச்சு எனது காதுகளில் விழுமானால் நான் வாழ மாட்டேன். இதை அறிவாயாக.

உருவுடையார் இளையார்கள் நல்லார்
ஒத்துவல் லார்களைக் கொண்டு வைகல்
தெருவிடை எதிர்கொண்டு பங்குனி நாள்
திருந்தவே நோற்கின்றேன் காமதேவா!
கருவுடை முகில்வண்ணன் காயாவண்ணன்
கருவிளை போல்வண்ணன் கமலவண்ணத்
திருவுடை முகத்தினில் திருக்கண்களால்
திருந்தவே நோக்கெனக் கருள்கண்டாய் (6)

<u>எளிய உரை :</u> வேதங்களில் வல்லவர்கள், அவற்றை பலமுறை உருவேற்றக் கூடியவர்கள். இளையோர், நல்லவர்கள் — இவர்களைத் தெருவில் எதிர்கொண்டு பங்குனி மாத நாட்களில் பிழையேதும் இல்லாமல் நோன்பு நோற்கின்றேன். காமதேவனே! கரிய நிறமுள்ள மேகத்தைப் போன்றவனும் 'காயா' என்னும் மலரைப் போன்ற கரிய நிறமுள்ளவனுமாகிய கண்ணனின் தாமரை மலர் போன்ற முகத்திலுள்ள கண்களால் என்னைத் திருத்தமாக நோக்கும்படி எனக்கு அருள் செய்வாயாக.

காயுடை நெல்லொடு கரும்பமைத்துக்
கட்டியரிசி அவல மைத்து
வாயுடை மறையவர் மந்திரத்தால்
மன்மதனே! உன்னை வணங்குகின்றேன்

தேசமுன் னளந்தவன் திரிவிக்ரமன்
திருக்கைகளால் என்னைதீண்டும் வண்ணம்
சாயுடை வயிறும் என் தடமுலையும்
தரணியில் தலைப்புகழ் தரக்கிற்றியே (7)

எளிய உரை : மன்மதனே! தேங்காய், நெய், கரும்பு, அரிசி, அவல் இவற்றை உனக்காப் படைக்கிறேன். உண்மையே பேசுகின்ற அந்தணர்களின் வேதங்களைக் கூறி உன்னை வணங்குகிறேன். முன்பொரு சமயம் திரிவிக்ரமனாக (வாமனன்) அவதாரம் எடுத்து மாவலி என்னும் கொடிவனை விண்ணுலகுக்கு அனுப்பி அனைவரையும் காத்தவன் திருமால். அவனது திருக்கைகள் எனது அழகிய வயிற்றையும் அகன்ற மார்பையும் தீண்டும்படி நீ எனக்கு அருள் புரிவாயாக.

மாசுடை யுடம்பொடு தலையுலறி
வய்ப்புறம் வெளுத்து ஒரு போதுமுண்டு
தேசுடைத் திறலுடைக் காமதேவா
நோற்கின்ற நோன்பினைக் குறிக்கொள் கண்டாய்
பேசுவதொன் றுண்டுஇங்கு எம்பெருமான்
பெண்மையைத் தலையுடைத் தாக்கும் வண்ணம்
கேசவ நம்பியைக் கால்பிடிப்பாள்
என்னும் இப்பேறு எனக்கு அருள்கண்டாய் (8)

எளிய உரை : மாசடைந்த உடம்புடன், கூந்தலுக்கு எண்ணெய் பூசாத காரணத்தால் அது உலர்ந்து விட்டது. வாய் இதழ்கள் காய்ந்து விட்டன. ஒரு வேளை மட்டுமே உணவு உண்டு உன்னை வேண்டி நோன்பு நோற்கிறேன். அழகும் வீரமும் நிறைந்த காமக்கடவுளே! எனது நோன்பைக் கருத்தில் கொள்வாயாக. பெண்மைக்குச் சிறப்புச் செய்யும் நோக்கம் அந்தக் கேசவனுக்கு இருக்குமானால், அவனது கால்களை நான் பிடிக்கும் பேற்றினை அவன் தந்து அருள் செய்யப்படும். நீதான் அதற்கு அருள் புரியவேண்டும்.

தொழுது முப்போதும் உன்னடி வணங்கித்
தூமலர் தூய்த்தொழு தேத்துகின்றேன்
பழுதின்றிப் பார்கடல் வண்ணனுக்கே
பணி செய்து வாழப் பெறாவிடில் நான்



அழுதழு தலமந்தம் மாவழங்க
ஆற்றவும் அது சுணக்கு உரைக்கும் கண்டாய்
உழுவதோ ரெருத்தினை நுகங்கொடு பாய்ந்து
ஊட்டமின்றித் துறந்தா லொக்குமே (9)

<u>எளிய உரை :</u> காமதேவனே! மூன்று வேளைகளும் தூய்மையான மலர்களைத் தூவி உனது பாதங்களை வணங்குகிறேன். பழுதில்லாமல் என்னைப் பார்ப்பாயாக. கடல் வண்ணனாகிய கண்ணனுக்கே தொண்டு செய்து வாழ நினைக்கின்றேன். அவ்வாறு எனது ஆவல் நிறைவேறாவிட்டால் நான் அழுது அழுது துன்பம் அடையும் போது தான் எனது துன்பம் எப்படிப்பட்டது என்று உனக்கு உறைக்கும். இது எப்படியுள்ளது என்றால் உழக்கூடிய ஆற்றல் உள்ள ஓர் எருதினை உணவு தராமல் அதன் வலிமை கெட்டிருக்கும் வேளையில் அதன் கழுத்தில் நுகத்தடியைச் சுமத்தி ஓட்டுவது போல் உள்ளது.

கருப்புவில் மலர்க்கணைக் காமவேளைக்
கழலிணை பணிந்து அங்கோர் கரியலற
மருப்பினை ஒசித்துப் புள்வாய் பிளந்த
மணிவண்ணற்கு என்னை வகுத்திடென்று
பொருப்பன்ன மாடம் பொலிந்து தோன்றும்
புதுவையர் கோன் விட்டுசித்தன் கோதை
விருப்புடை இன்தமிழ்மாலை வல்லார்
விண்ணவர் கோன்அடி எண்ணுவரே (10)

<u>எளிய உரை :</u> திருமாலைப் பூசித்து வந்தயானை காலினை நீர்நிலையில் இருந்த முதலை கவ்விக் கொண்டது. முதலையின் வாயிலிருந்து தன்னைக் காக்கும்படி திருமாலிடம் வேண்டியது. யானை. உடனே விரைந்தோடி வந்து அந்த யானையைக் காப்பாற்றினார் திருமால். கண்ணாக அவதரித்த போது ஒரு பறவையின் வாயைப் பிளந்தால் அப்படிப்பட்டவள் மணிவண்ணன். அவனிடம் என்னைச் சேர்ப்பிக்க வழி வகுக்கும்படிக் கரும்பு வில்லும் மலர் அம்புகளும் கொண்ட

காமதேவனை வேண்டினேன். மலைச் சிகரங்கள் போல் உயர்ந்து தோன்றும் மாளிகைகள் நிறைந்த 'புதுவை' என்று அழைக்கப்படும் வில்லிப்புத்தூரில் வாழும் விட்டு சித்தன் என்பருடைய செல்வியாகிய கோதை சொன்ன இந்தத் தமிழ்மாலையை ஓதுபவர் விண்ணவர்த் தலைவனின் திருவடிகளை அடைவார்கள்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

*



இரண்டாம் திருமொழி – நாமமாயிரம்

(இடைக் குலப் பெண்கள் மணலில் வீடுகள் கட்டி விளையாடுகின்றனர். அந்த மணல் வீடுகளைக் கண்ணன் சிதைக்கிறான். அவ்வாறு செய்ய வேண்டாம். என்று அந்த பெண்கள் கண்ணனை வேண்டுகிறார்கள். இவ்வாறு அமைந்துள்ளன கீழ்வரும் பத்துப் பாசுரங்கள்).

எழுசீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்
யமுனா கல்யாணி இராகம் – திரிபுடை தாளம்

நாமமாயிரம் ஏத்தநின்ற
நாராயணா! நரனே! உன்னை
மாமிதன் மகனாகப் பெற்றால்
எமக்கு வாதை தவிருமே
காமன் போதரு காலமென்று
பங்குனி நாள்கடை பாரித்தோம்
தீமை செய்யும் சிரீதரா! எங்கள்
சிற்றில் வந்து சிதையேலே (1)

எளிய உரை : ஆயிரம் பெயர்கள் சொல்லி வணங்கத் தக்க நாராயணா! மனித உருவில் அவ்வப்போது உலகில் வந்து பிறந்தவனே! உன்னை எங்கள் மாமி (அத்தை) மகனாகப் பெற்றால் எனது துன்பம் தீர்ந்திடும். உன்னைக் கைப்பிடிப்பது எளிது. காமன் வருகை தரும் மாலை நேரம் என்று வீட்டின் முன்புறம் அழகு செய்து வைத்தோம். நாங்கள் மணலில் கட்டிய வீடுகளை நீ சிதைத்துத் தீமை செய்கிறாய். எங்கள் சிறிய மணல் வீடுகளைச் சிதைக்க வேண்டாம். (குழந்தைப் பருவம் பத்துப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவற்றில் ஒருபருவம் சிற்றில் சிதைக்கும் பருவம்.)

இன்று முற்றும் முதுகுநோவ
இருந்திழைத்த இச்சிற்றிலை
நன்றும் கண்ணுர நோக்கி நாங்கொளும்
ஆர்வந்தன்னைத் தணிகிடாய்





*அன்று பாலகனாகி ஆலிலைமேல்*
*துயின்ற எம்மாதியாய்!*
*என்றும் உன்தனக்கு எங்கள்மேல்*
*இரக்க மெழாதது எம் பாவமே* (2)

*<u>எளிய உரை :</u> இன்று முழுவதும் எங்கள் முதுகு நோக முயன்று மணலில் கட்டியது இந்தச் சிறிய வீடு. நாங்கள் கட்டிய இந்த வீட்டை எமது கண்களால் கண்டு அடையும் எங்கள் மகிழ்ச்சியைக் கொடுத்துவிடாதே. ஒரு சமயம் குழந்தையாக வடிவம் கொண்டு ஆலிலையில் கண்ணுறங்கிய முழுமுதல் பொருளே! எங்கள் மேல் என்றுமே உனக்கு இரக்கம் ஏற்படுவது இல்லை. அதற்குக் காரணம் நாங்கள் அல்ல. நாங்கள் செய்த பாவமே ஆகும்.*

*குண்டு நீருறை கோளரீ! மதயானை*
*கோள்விடுத்தாய் உன்னைக்*
*கண்டு மாலுரு வோங்களைக் கடல்*
*கண்களால் இட்டு வாதியேல்*
*வண்டல் நுண் மணல்தெள்ளி யாம்வளைக்*
*கைகளால் சிரமப்பட்டோம்*
*தெண்திரைக் கடல்பள்ளியாய்! எங்கள்*
*சிற்றில் வந்து சிதையேலே* (3)

*<u>எளிய உரை :</u> ஆழமான நீரில் (பாற்கடலில்) வாழும் நரசிங்க அவதாரம் எடுத்த திருமாலே! கம்சன் அனுப்பிய மதயானையின் கொட்டத்தை அடக்கினாய். உன்னைப் பார்த்து மயங்குகின்ற எங்களை, உனது கடைக்கண்ணால் பார்த்து வருத்தடையச் செய்யாதே. கரிய நுண்மணல் கொண்டு, வளையல் அணிந்த எமது கைகளால் முயன்று கட்டியது இந்த மணல் வீடு. தெளிந்த நீரைப் (பாற்கடலை) படுக்கையாகக் கொண்டவனே ! எங்கள் சிற்றிலைச் சிதைக்க வேண்டாம்.*

*பெய்யு மாமுகில் போல்வண்ணா! உந்தன்*
*பேச்சும் செய்கையும் எங்களை*
*மையலேற்றி மயக்க உன்முகம்*
*மாயமந்திரம் தான் கொலோ?*



நொய்யர் பிள்ளைகள் என்பதற்கு உன்னை
 நோவ நாங்கள் உரைக்கிலோம்
செய்ய தாமரைக் கண்ணினாய்! எங்கள்
 சிற்றில் வந்து சிதையேலே (4)

எளிய உரை : மழை பொழிகின்ற மேகத்தைப் போன்ற நிறம் கொண்டவனே! உனது பேச்சும் செயலும் எங்களுக்குக் காம உணர்வு ஏற்றி மயக்குகின்றது. உன் முகம் மாயமா அல்லது மந்திர சக்தி கொண்டதா? உன்னை விட நாங்கள் தாழ்ந்தவர்கள். ஆகவே நாங்கள் உன்னை நொந்து கொள்ள முடியாது. சிவந்த தாமரை மலர் போன்ற கண்களை உடையவனே! நாங்கள் கட்டிய சிறிய மணல் வீட்டை சிதைக்க வேண்டாம்.

வெள்ளை நுண்மணற் கொண்டு சிற்றில்
 விசித்தி ரப்பட வீதிவாய்த்
தெள்ளி நாங்க ளிழைத்த கோலம்
 அழித்தி யாகிலும் உன்தன்மேல்
உள்ள மோடி உருக வல்லால்
 உரோட மொன்றுமிலோம் கண்டாய்
கள்ள மாதவா! கேசவா!
 உன்முகத்தன கண்க ளல்லவே (5)

எளிய உரை : கள்ளத்தனமுள்ள மாதவனே! கேசவனே! வெள்ளையான நுண்ணியமணல் கொண்டு வந்து தெருவில் அழகான மணல் வீடு கட்டினோம். இப்படிப்பட்ட அழகிய மணல் வீட்டை நீ சிதைத்து அழித்தால் கூட உன்மீது எனது உள்ளம் ஓடி உருகுகின்றதே தவிர கோபம் ஏற்படவில்லை. உன் முகத்தில் உள்ளவை கண்களே அல்ல. (அவற்றிற்கு ஏதோ ஒரு சக்தி உள்ளது)

முற்றிலாத பிள்ளைகளோம்
 முலைபோந் தலாதோமை நாள்தோறும்
சிற்றில்மே விட்டுக் கொண்டு நீசிறிது
 உண்டு தின்னென நாம்அது
கற்றிலோம் கடலை அடைத்து
 அரக்கர் குலங்களை முற்றவும்
செற்று இலங்கையைப் பூசலாக்கிய
 சேவகா! எம்மை வாதியேல் (6)

55978





எளிய உரை : வளர்ச்சி பெறாத பிள்ளைகள் நாங்கள். எமது மார்பகங்களும் வளர்ச்சியடையவில்லை. நாள்தோறும் நாங்கள் கட்டும் மணல் வீட்டை நீ அழிக்கிறாய். மண்ணையும் சிறிது உண்கிறாய். எங்களையும் தின்னும்படிக் கூறுகிறாய். நாங்கள் மணலை உண்ணும் செயலைக் கற்கவில்லை. கடலில் பாதை அமைத்து, இலங்கையில் இருந்த அரக்கர் குலத்தை அடியோடு அழித்தவன் நீ. எங்களை வருத்தமடையச் செய்ய வேண்டாம்.

திருமால் இராமனாகப் பிறந்து இலங்கைத் தீவுக்குச் சேது அணைகட்டி, அதன் வழியாக இலங்கை சென்று அங்கிருந்த அரக்கர்களை அழித்த செயல் இப்பாடலில் குறிப்பிடப் பட்டுள்ளது.

பேதம் நன்கறி வார்களோடு இவை
பேசினால் பெரிது இன்சுவை
யாதுமொன் றறியாத பிள்ளைக
ளோமைநீ நலிந்து என்பயன்?
ஓதமா கடல்வண்ணா! உன்மன
வாட்டி மாரொடு சூளுறும்
சேது பந்தம் திருத்தினாய் எங்கள்
சிற்றில் வந்து சிதையேலே (7)

எளிய உரை : நன்று தீது என்னும் பாகுபாடு நன்கு அறிந்தவர் களுடன் காதலுணர்வு பற்றிப் பேசினால் அது தகும். அந்தச் சுவையைப் பற்றி ஏதும் அறியாத பிள்ளைகளாகிய எங்களைத் துன்புறுத்தி நீ என்ன பயன்? குளிர்ந்த கடல் நீரின் நிறம் கொண்டவனே! உனது துணைவிமாரோடு அது பற்றி நீ ஆலோசனை நடத்துவாயாக. சேது பந்தனம் நிகழ்த்தியவனே! நாங்கள் கட்டிய சிறிய மணல்வீட்டைச் சிதைத்திட வேண்டாம்.

வட்ட வாய்ச்சிறு தூதையோடு
சிறுசுளகும் மணலும் கொண்டு
இட்டமா விளையாடு வோங்களைச்
சிற்றி லீடழித்து என்பயன்?
தொட்டுதைத்து நலியேல் கண்டாய்
சுடர்ச் சக்கரம் கையில் ஏந்தினாய்
கட்டியு கைத்தால் இன்னாமை
அறிதியே கடல்வண்ணனே (8)



எளிய உரை : வட்டமான, சிறுவாயையுடைய மண்பானையும் சிறிய முறமும் மணலும் கொண்டு விருப்பம் போல விளையாடும் எங்களுடைய மணல் வீடுகளை அழிப்பதால் நீ அடையும் பயன் என்ன? ஒளிவீசுகின்ற சக்கரப் படையைக் (ஆயுதத்தை) கையில் ஏந்தியவனே! நாங்கள் மணலால் கட்டிய சிறிய வீடுகளை அழித்துவிடாதே. கடல் வண்ணனே! நாங்கள் கட்டிய மணல் வீடுகளை நீ அழிப்பது தீமை என்பதை நீ அறிவாய் அல்லவா.

முற்றத் தூடு புகுந்து நின்முகம் காட்டிப்
புன்முறுவல் செய்து
சிற்றிலோடு எங்கள் சிந்தையும் சிதைக்கக்
கடவையோ கோவிந்தா!
முற்ற மண்ணிடம் தாவி விண்ணுற நீண்டு
அளந்து கொண்டாய்! எம்மைப்
பற்றி மெய்ப்பிணக் கிட்டக்கால் இந்தப்பக்கம்
நின்றவர் என் சொல்லார்? (9)

எளிய உரை : முற்றத்தின் வழியாகப் புகுந்து உன் முகத்தைக் காட்டிப் புன்முறுவல் செய்து நாங்கள் கட்டிய மணல் வீடுகளை மட்டுமல்லாமல் எங்கள் உள்ளத்தையும் நீ சிதைத்து விட்டாய். கோவிந்தா! ஒரு சமயம் மண்ணையும் விண்ணையும் நீ உனது திருவடிகளால் அளந்தாய். நீ எங்கள் மணல் வீடுகளைச் சிதைப்பதும், அவ்வாறு செய்யவேண்டாம் என்றுநாங்கள் உன்னிடம் வேண்டுவதும் அருகிலிருந்து பார்ப்பவர்களுக்கு உண்மையான சண்டைதானோ இது என்று தோன்றும் அல்லவா?.

சீதைவா யமுதமுண்டாய்! எங்கள்
சிற்றில் நீ சிதையே லென்ற
வீதிவாய் விளையாடும் ஆயர்
சிறுமியர் மழலைச் சொல்லை
வேத வாய்த்தொழி லார்கள் வாழ்வில்லி
புத்தூர்மன் வீட்டுசித் தன்தன்
கோதை வாய்த்தமிழ் வல்லவர்
குறைவின்றி வைகுந்தம் சேருவரே (10)





<u>எளிய உரை :</u> இராமனாக நீ அவதாரம் எடுத் மணந்து அவளது வாயிலிருந்து ஊறும் அமுத உண்டாய். ஆயர் சிறுமிகள் தங்கள் மணல் வீ வேண்டாம் என்று கூறியதாக, வேதங்கள் ஓ தொழிலாகக் கொண்டவர்கள் வாழ்கின்ற வில் சித்தன் (பெரியாழ்வார்) மகளாகிய கோதை வா வல்லவர் வைகுந்தம் சேர்வார்கள்.

ஆண்டாள் திருவடிகளே சரண

*



மூன்றாம் திருமொழி – கோழி அழைப்பதன் முன்னம்

பெண்கள், நீராடுவதற்காகத் தங்கள் ஆடைகளைக் களைந்து கரையில் ஓரிடத்தில் வைத்துவிட்டுச் செல்லுகிறார்கள். அவற்றைக் கண்ணன் திருடிச் சென்று மரக்கிளையில் அமர்ந்து கொள்கிறான். நீராடிவிட்டுத் தங்கள் ஆடைகளைத் தேடிய பெண்கள் தங்கள் ஆடைகள் காணாமையால் ஏமாற்றம் அடைகிறார்கள். தங்கள் ஆடைகளைக் கண்ணன் கவர்ந்து சென்றதை பெண்கள் அறிகிறார்கள். அவற்றைத் தங்களுக்குத் தருமாறு வேண்டுவது போல இப்பாசுரங்கள் அமைந்துள்ளன.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்
செஞ்சுருட்டி இராகம் –அடதாளம்

கோழி யழைப்பதன் முன்னம்
குடைந்துநீ ராடுவான் போந்தோம்
ஆழியஞ் செல்வன் எழுந்தான்
அரவணைமேல் பள்ளி கொண்டாய்
ஏழைமை ஆற்றவும் பட்டோம்
இனியென்றும் பொய்கைக்கு வாரோம்
தோழியும் நானும் தொழுதோம்
துகிலைப் பணித்தருளே. (1)

<u>எளிய உரை :</u> பாம்புப் படுக்கையில் பள்ளி கொண்டவனே! நானும் எனது தோழியும் நீராடுவதற்காகப் பொய்கைக்குச் சென்றோம். கதிரவனும் கிழக்கில் உதித்தான். நாங்களோ, எங்கள் ஆடைகளை இழந்து அவமானப் பட்டோம். நானும் எனது தோழியும் உன்னைத் தொழுதோம். எங்கள் ஆடைகளை எங்களுக்குத் தருவாயாக.

இதுஎன் புகுந்தது இங்கு அந்தோ
இப்பொய்கைக்கு எவ்வாறு வந்தாய்?
மதுவின் துழாய் முடிமாலே
மாயனே எங்கள் அமுதே!





விதிஇன்மை யால்அது மாட்டோம்
வித்தகப் பிள்ளாய்! விரையேல்
குதிகொண்டு அரவில் நடித்தாய்
குருந்திடைக் கூறை பணியாய் (2)

எளிய உரை : தேன் சிந்துகின்ற துளசி மாலையைத் தலையில் சூடிய திருமாலே! மாயச் செயல்களில் வல்லவனே! எங்களுக்குச் சாவா மருந்தாக (அமுதம்) இருப்பவனே! நாங்கள் நீராடக் கூடிய பொய்கைக்கு (குளத்திற்கு) எந்த வழியாக வந்தாய்? அறிவு நிறைந்த பிள்ளையே! எங்கள் அமுதமே! உனது செயல் விதிக்குப் புறம்பானது அல்லவா. ஒரு சமயம் காளியன் என்னும் பாம்பின் மீது நடனம் ஆடியவனே! குருந்த மரத்தில் வைத்திருக்கக் கூடிய எங்கள் ஆடைகளை விரைந்து தருவாயாக.

எல்லே! ஈதுஎன்ன இளமை?
எம்மனைமார் காணில் ஒட்டார்
பொல்லாங்கு ஈதென்று கருதாய்
பூங்குருந்து ஏறி இருத்தி
வில்லால் இலங்கை அழித்தாய்!
நீ வேண்டியது எல்லாம் தருவோம்
பல்லாரும் காணாமே போவோம்
பட்டைப் பணித்தரு ளாயே (3)

எளிய உரை : பிறர் இகழ்ச்சிக்கு உரியவனே! நீ செய்திருக்கும் செயல் அறியாமை நிறைந்தது. ஆடைகளை இழந்துவிட்டு நாங்கள் நிற்பதை எங்கள் வீட்டிலுள்ளவர்கள் கண்டால் மீண்டும் சேர்க்க மாட்டார்கள். நீ செய்துள்ள இச்செயல் பொல்லாங்கு நிறைந்தது என்று உனக்குத் தோன்றவில்லையா? பூக்கள் பூத்த குருந்த மரத்தில் ஏறி இருக்கிறாய். உனது வில்லைக் கொண்டு இராமாவதாரத்தில் இலங்கையை அழித்தவன் நீ. அப்படிப்பட்ட செயல் செய்த நீ இப்போது செய்த இச்செயல் சரியா? நீ வேண்டிய பொருள்களை உனக்குத் தருகிறோம். யார் கண்ணிலும் படாமல் எங்கள் இல்லங்களுக்குச் சென்று விடுகிறோம். எங்கள் பட்டாடைகளைக் கொடுத்து அருள்புரிவாயாக.

(எல்லே—இகழ்ச்சிக் குறிப்புச் சொல், பட்டு — ஒருவகை ஆடை)



*பரக்க விழித்து எங்கும் நோக்கிப்*
*பலர்குடைந்து ஆடும் சுனையில்*
*அரக்க நில்லா கண்ணநீர்கள்*
*அலமரு கின்றவா பாராய்*
*இரக்க மேலொன் றுமிலாதாய்*
*இலங்கை அழித்த பிரானே!*
*குரக்கரசு ஆவது அறிந்தோம்*
*குருந்திடைக் கூறை பணிவாய்* (4)

*__எளிய உரை :__ இரக்கம் என்பது ஒரு சிறிதும் இல்லாதவனே! இராமாவதாரத்தில் இலங்கையை அழித்த பிரானே! குரங்காகிய சுக்ரீவனை கிட்கிந்தைக்கு அரசனாக நீ ஆக்கியதை அறிவோம். அகன்ற பரப்பை உடைய இந்தச் சுனையில் கண்களை அகல விரித்து எங்கும் நோக்கி, பலர் மூழ்கி நீராடுகின்றார்கள். எங்கள் ஆடைகளை நீ கவர்ந்து சென்று குருந்த மரத்தில் வைத்துள்ளாய். இதனால் எங்கள் கண்களில் இருந்து துடைக்கவும் நில்லாமல் கண்ணீர் பெருகி வருகிறது. நாங்கள் ஆடைகளை உன்னிடம் பறிகொடுத்து விட்டுத் துன்பம் அடைவதை நீ காணவில்லையா? எங்கள் ஆடைகளைத் தருவாயாக.*

*காலைக் கது விடுகின்ற*
*கயலொடு வாளை விரவி*
*வேலைப் பிடித்தென்னை மார்கள்*
*ஓட்டில் என்ன விளையாட்டோ?*
*கோலச் சிற்றாடை பலவும்*
*கொண்டுநீ ஏறி இராதே*
*கோலம் கரிய பிரானே!*
*குருந்திடைக் கூறை பணியாய்* (5)

*__எளிய உரை :__ கயல், வாளை என்னும் வகையைச் சேர்ந்த மீன்கள் நீர் நிலையிலே நாங்கள் குளிக்கும் போது எங்கள் கால்களைக் கடித்துத் துன்புறுத்துகின்றன. அழகான எங்களுடைய சிற்றாடைகளை நீ கவர்ந்து சென்று மரத்தில் ஏறி அமர்ந்திருக்கிறாய். ஆடைகள் இல்லாமல் நாங்கள் குளத்திலிருந்து எவ்வாறு கரைக்கு வர முடியும்? கரிய நிறம் கொண்ட அழகான கண்ணனே! குருந்த மரத்தில் இருக்கும் எங்கள் ஆடைகளை எங்களுக்குத் தந்து அருள்புரிவாயாக.*





தடத்தவிழ் தாமரைப் பொய்கைத்
தாள்கள்எம் காலைக் கதுவ
விடத்தேள் எறிந்தா லேபோல
வேதனை ஆற்றவும் பட்டோம்
குடத்தையெடுத் தேற விட்டுக்
கூத்தாட வல்லஎங் கோவே!
படிற்றை யெல்லாம் தவிர்த்தெங்கள்
பட்டைப் பணித்தரு ளாயே (6)

எளிய உரை : அகன்ற பொய்கையிலே மலர்ந்திருக்கக் கூடிய தாமரை மலர்களின் கொடிகள் எங்கள் கால்களை வருத்தும்படிச் செய்கின்றன. அது விஷத் தேள் கொட்டியது போல எங்கள் கால்களை வருத்துகின்றன.குடங்களை ஒன்றில்மேல் ஒன்றாகத் தலையில் தாங்கிக் கொண்டு குடக்கூத்து ஆடுவதில் வல்லவனே! நீ செய்த குற்றத்தை விட்டு விட்டு எங்கள் பட்டாடைகளை எங்களுக்குத் தந்து அருள் புரிவாயக.

நீரிலே நின்று அயர்கின்றோம்
நீதி அல்லாத செய்தாய்
ஊரகம் சாலவும் சேய்த்தால்
ஊழி எல்லாம் உணர்வானே!
ஆர்வம் உனக்கே உடையோம்
அம்மனைமார் காணில் ஒட்டார்
போரவிடாய் எங்கள் பட்டை
பூங்குருந் தேறி இராதே. (7)

எளிய உரை : ஆடைகள் இல்லாத காரணத்தினால் நாங்கள் இந்தப் பொய்கை நீரிலே நின்று துன்பம் அடைகிறோம். நீ, நீதிக்கு அப்பாற்பட்ட செயலை செய்தாய். எங்கள் ஊர் இருக்குமிடமோ மிகவும் தூரமாக உள்ளது. பல ஊழிகள் எல்லாம் அறிந்தவன் நீ. உன்மேல் நாங்கள் அன்பு வைத்துள்ளோம். எங்கள் அன்னைமார்கள் இக்காட்சியைக் காண நேர்ந்தால் எங்களை வீட்டில் சேர்க்க மாட்டார்கள். பூக்கள் நிறைந்த குருக்க மரத்தில் ஏறி அமர்ந்திருக்காதே, எங்களைப் போர்த்திக் கொள்ள எமது பட்டாடைகளைத் தருவாயாக.



*மாமியார் மக்களே அல்லோம்*
*மற்றும் இங்கு எல்லோரும் போந்தார்*
*தூமலர்க் கண்கள் வளரத்*
*தொல்லை இராத்துயில் வானே*
*சேமமே லன்றிது சாலச்*
*சிக்கென நாம் இது சொன்னோம்*
*கோமள ஆயர் கொழுந்தே*
*குருந்திடைக் கூறை பணியாய்* (8)

<u>எளிய உரை :</u> உனது மலர்களாகிய கண்கள் மூடி இரவில் நீண்ட நேரம் உறங்குபவனே! இங்கு நீராட வந்தவர்கள் உனது மாமிமார்களின் மகள்கள் அல்லர் (நீ எங்களிடம் விளையாட) அது மட்டுமல்ல. நீராட வந்தவர்கள் உனக்கு வேறு உறவுமுறை உள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். இவர்கள் முன்னிலையில் நீ செய்யும் செயல் மேலான செயல் அல்ல. 'சிக்' என்று உனக்கு உறைக்கும்படி நாங்கள் கூறுகிறோம். ஆயர்க்குடியில் பிறந்த அழகான இளைஞனே! குருக்க மரத்திலே நீ வைத்திருக்கும் ஆடைகளை எமக்குத் தந்தருள்வாயாக.

*கஞ்சன் வலைவைத்த அன்று*
*காரிருள் எல்லில் பிழைத்து*
*நெஞ்சு துக்கம் செய்யப் போந்தாய்*
*நின்றஇக் கன்னிய ரோமை*
*அஞ்ச உரப்பாள் அசோதை*
*ஆணாட விட்டிட் டிருக்கும்*
*வஞ்சகப் பேய்ச்சி பாலுண்ட*
*மசிமையிலீ! கூறை தாராய்.* (9)

<u>எளிய உரை :</u> கம்சன் உன்னைக் கொல்வதற்காகத் தக்க தருணம் பார்த்துக் கொண்டிருந்தபோது, கரிய இரவு நேரத்தில் தப்பிப் பிழைத்து வந்தவனே. கன்னிப் பெண்களாகிய எங்கள் நெஞ்சம் துன்பம் அடையும்படிச் செய்வதற்காக இங்கு வந்து பிறந்தாய் போலும், உனது வளர்ப்புத் தாயாகிய அசோதை உன்னை 'மிரட்டி வைக்க மாட்டேன்' என்கிறாள். கம்சனால் அனுப்பப்பட்டு, உன்னைக் கொல்ல வந்த பேய்ப் பெண்ணின்

பாலை பலர்காண வெட்கம் இல்லாமல் குடித்தவனே! எங்கள் ஆடைகளைத் தருவாயாக. மசிமை – வெட்கம், நாணம்.

கன்னியரோடு எங்கள் நம்பி
 கரியபிரான் விளையாட்டை
பொன்னியல் மாடங்கள் சூழ்ந்த
 புதுவையர் கோன்பட்டன் கோதை
இன்னிசையால் சொன்ன மாலை
 ஈரைந்தும் வல்லவர் தாம்போய்
மன்னிய மாதவ னோடு
 வைகுந்தம் புகுந்திருப் பாரே. *(10)*

<u>எளிய உரை :</u> நற்குணங்கள் பொருந்திய எங்கள் கரியபிரானாகிய கண்ணன் கன்னிப் பெண்களுடன் விளையாடிய விளையாட்டை, பொன்னால் ஆகிய மாடங்கள் சூழ்ந்த புதுவையர்கோன் பட்டர் பிரானுடைய கோதை இன்னிசையோடு கூடிய பாடல்களாகப் பாடினாள். இந்தப் பத்துப் பாடல்களில் வல்லவர்கள் நிலையான மாதவனுடன் வைகுந்தத்திற்குப் போய்ச் சேருவார்கள்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

*



## நான்காம் திருமொழி – தெள்ளியார் பலர் கூடல் இழைத்தல்

*தலைமகள் தலைமகனைக் கூடுவதற்கு வாய்ப்புக் கிடைக்குமா என்பதைத் தெரிந்து கொள்ள 'சகுணம்' பார்ப்பது வழக்கம். தரையில் மணலைப் பரப்பி, விரலால் பெரிய வட்டம் வரைய வேண்டும். அந்த வட்டத்திற்குள் பல சிறிய வட்டங்கள் வரைய வேண்டும். இப்படி வரைந்த சிறிய வட்டங்களை எண்ணும் போது அவை இரட்டைப் படையாக வந்தால் தலைவனிடம் கூடல் உண்டு என்றும், ஒன்றைப் படையாக வந்தால் கூடல் நிகழாது என்பதும் சகுணம் பார்த்ததின் முடிவாகும். இவ்வாறு சிறிய வட்டங்களை மணல் பரப்பில் வரையும் போது அவற்றை வரைபவர்கள் 'கூடிடு கூடலே' – என்று சொல்லிக் கொண்டே வரைவது வழக்கம். கூடல் – உள்ளத்தாலும் உடலாலும் தலைமகனும் தலைமகளும் ஒன்றிக் கலத்தல்.*

*கேதார ராகம் – அட தாளம்*

*தெள்ளியார்பலர் கைதொழும் தேவனார்*
*வள்ளல் மாலிருஞ்சோலை மணாளனார்*
*பள்ளி கொள்ளு மிடத்து அடிகொட்டிட*
*கொள்ளு மாகில்நீ கூடிடு கூடலே* (1)

*<u>எளிய உரை :</u> தெளிந்த அறிவுடைய பலர் கை கூப்பி வணங்குகின்ற இறைவர் அவர். வள்ளல் குணம் கொண்டவர். திருமாலிருஞ்சோலையில் குடிகொண்டுள்ள மணாளர். அவர் பள்ளிக்கொள்ளும்போது அவரது பாதங்களைத் தீண்டும் பேறு எனக்குக் கிடைக்குமானால் கூடலே! நீ கூடுவாயாக. மாலிருஞ்சோலை மதுரைக்கு அருகிலுள்ள திருமாலிருஞ்சோலை என்னும் இடம். கள்ளழகர்க்கோயில் என்றும் அழைக்கப்படுகிறது.*

*காட்டில் வேங்கடம் கண்ண புரநகர்*
*வாட்டமின்றி மகிழ்ந்துறை வாமனன்*
*ஓட்டரா வந்துஎன் கைப்பற்றி தன்னொடும்*
*கூட்டு மாகில்நீ கூடிடு கூடலே* (2)





<u>எளிய உரை :</u> காட்டிலுள்ள வேங்கடமலை, கண்ணபுரநகர் ஆகிய தலங்களில் கவலை ஏதும் இல்லாமல் மகிழ்ச்சியாக வாழ்கின்ற வாமனனாக அவதாரம் செய்த திருமால் ஓடிவந்து எனது கைப்பிடித்து அவனோடு கூடியிருக்கும் பேறு எனக்குக் கிடைக்குமானால் கூடலே! நீ கூடுவாயாக. கூடுதல் – தலைவனும், தலைவியும் ஒன்றிக் கலத்தல். உடலால் மட்டுமின்றி உள்ளத்தாலும் ஒன்றுபடுதலே கூடலாகும். காற்று இடையே நுழைந்து பிரிக்காத அளவு உடலாலும் இருவரின் உள்ளங்களும் வேறல்ல என்னும்படி உள்ளத்தாலும் செம்மண்ணிலே விழுந்தநீர் சிவந்த நிறம் பெறுவது போல ஒன்றுபடுவதே 'கூடுதல்' என்பதற்குப் பொருளாகும். காற்று இருவருக்கும் இடையே நுழைந்து விடாதபடி கூடுதல் என்பதற்கு,

வீழும் இருவர்க்கு இனிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு — என்னும் குறளையும்

இருவரின் உள்ளங்களும் பிரியாமல் கூடுதல் என்பதற்கு 'செம்புலப் பெயல்நீர் போல, என்னும் சங்கப் பாடலையும் எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

பூமகள் புகழ்வானவர் போற்றுதற்கு
ஆமகன் அணிவாணுதல் தேவகி
மாமகன் மிகுசீர் வசுதேவர்தம்
கோமகன்வரில் கூடிடு கூடலே (3)

<u>எளிய உரை :</u> திருமாலின் கொப்பூழ் (தொப்புள்) என்னும் மலரில் பிறந்தவன் பிரம்மதேவன். இந்தப் பிரம்ம தேவனால் புகழப்படும் தேவர்கள் போற்றுகின்ற அளவு தகுதி படைத்தவன். அழகிய ஒளி பொருந்திய நெற்றியை உடைய தேவகிக்கும் வசுதேவருக்கும் பிறந்தவன் கண்ணன். இவன் இங்கு வர சந்தர்ப்பம் கிட்டுமானால் கூடலே, நீ கூடுவாயாக.

ஆய்ச்சி மார்களும் ஆயரும் அஞ்சிட
பூத்தநீள் கடம்பேறிப் புகப்பாய்ந்து
வாய்த்த காளியன்மேல் நடமாடிய
கூத்த னார்வரில் கூடிடு கூடலே (4)



*<u>எளிய உரை :</u> இடையர் குலத்தில் பிறந்த ஆய்ச்சியரும், ஆயரும் அஞ்ச (பயப்பட) உயரமாக வளர்ந்து பூத்திருக்கும் கடம்பமரம் ஏறிப் பொய்கையில் (குளம்) குதித்து, அதில் வாழும் காளியன் என்னும் பாம்பின் மீது ஏறி நடனம் ஆடியவன் கண்ணன். நடனக் கலையில் வல்லவனாகிய அந்தக் கூத்தன் இங்கு வருவானாகில் கூடலே! நீ கூடுவாயாக. சிவபெருமானை 'கூத்தன்' என்று அழைப்பது வழக்கம். ஆண்டாள் கண்ணனை 'கூத்தனார்' என்று இப்பாடலில் குறிப்பிடுகிறாள்.*

*மாட மாளிகை சூழ்மது ரைப்பதி*
*நாடி நந்தெருவின் நடுவே வந்திட்டு*
*ஓடை மாமத யானை உதைத்தவன்*
*கூடு மாகில்நீ கூடிடு கூடலே* (5)

*<u>எளிய உரை :</u> மாட மாளிகைகள் சூழ்ந்திருக்கக் கூடிய மதுரையில் நமது தெருவின் நடுவில் நம்மைத் தேடி வந்துள்ளான் கண்ணன். முகபடாம் அணிந்த மதம் பொருந்திய யானையைத் தனது காலால் உதைத்தவன். அவன் நம்மை இரண்டறக் கலப்பான் ஆனால் கூடலே! நீ கூடிடுவாயாக. கம்சன் அனுப்பிய யானையைக் கண்ணன் கொன்ற செய்தி இப்பாடலில் கூறப்பட்டுள்ளது.*

*அற்றவன் மருதம் முறியநடை*
*கற்றவன் கஞ்சனை வஞ்சனையின்*
*செற்றவன் திகழும் மதுரைப்பதி*
*கொற்றவன் வரில் கூடிடு கூடலே* (6)

*<u>எளிய உரை :</u> முன்பு ஒரு சமயம் மருதமரங்கள் இரண்டும் முறிய நடை பழகியவன். வஞ்சனைகள் நிறைந்த கம்சனைக் கொன்றவன் வாழும் மதுரைப் பதிக்கு அரசனாகிய கண்ணன் வந்தால் கூடலே! நீ கூடிடுவாயாக. வளர்ப்புத் தாயாகிய யசோதை கண்ணனை ஒரு உரலில் கயிறு கொண்டு கட்டினாள். அவன் தவழ்ந்து இரு மருத மரங்களுக்கு இடையில் சென்றான் 'யமளார்ஜுனம்' என்றும் மருதமரங்கள் இரண்டும் முறிந்து விழுந்தன. இச் செய்தி இப்பாடலில் கூறப்பட்டுள்ளது. (அன்று + அவன் — அற்றவன்.)*





அன்று இன்னாதன செய் சிசு பாலனும்
நின்றநீள் மருதும் எருதும் புள்ளும்
வென்றிவேல் விறல் கஞ்சனும் வீழமுன்
கொன்றவன் வரில் கூடிடு கூடிலே (7)

<u>எளிய உரை :</u> தீய செயல்களைச் செய்து வந்த மருதமரங்கள் எருது, பறவை ஆகியவையும் வெற்றிவேலைத் தாங்கிய கம்சன் சிசுபாலன் ஆகியோர் இறந்து படும்படிச் செய்த கண்ணன் இங்கு வருவானாகில் கூடலே! நீ கூடுவாயாக.

ஆவலன் புடையார்தம் மனத்தன்றி
மேவலன் விரைசூழ் துவராபதிக்
காவலன் கன்றுமேய்த்து விளையாடும்
கோவலன்வரில் கூடிடு கூடலே (8)

<u>எளிய உரை :</u> கண்ணனின் மேல் ஆவலும் அன்பும் உடையவர்களுடைய மனத்தைத் தவிர மற்றவர்களின் மனத்தில் மேவிச் செல்லமாட்டான். நறுமணம் வீசுகின்ற துவாரகைக்கு அரசன் அவன். ஒரு சமயம் கன்றுகளை மேய்த்து விளையாடியவன். பசுக்களைக் காப்பவன். அவன் வருவானானால் கூடலே! நீ கூடிடுவாயாக.

கொண்ட கோலக் குறள்உருவாய்ச் சென்று
பண்டு மாவலிதன் பெருவேள்வியில்
அண்டமும் நிலமும் அடியொன்றினால்
கொண்டவன் வரில் கூடிடு கூடலே (9)

<u>எளிய உரை :</u> முன்பு ஒரு நாள் மாவலி என்னும் அரக்க மன்னன் வேள்வி செய்யும் போது குறுகிய 'வாமனன்' என்னும் அவதாரம் எடுத்துச் சென்றார் திருமால். அப்போது அண்டமும் நிலமும் ஒரே அடியால் அளந்தார். அவர் இங்கு வருவார் ஆனால் கூடலே கூடுவாயாக.

பழகுநான் மறையின் பொருளாய் மத
மொழுகு வாரணம் உய்ய அளித்தஎம்
அழகனார் அணி ஆய்ச்சியர் சிந்தையுள்
குழகனார்வரில் கூடிடு கூடலே (10)



<u>எளிய உரை :</u> பழகுகின்ற நான்கு வேதங்களின் பொருளாக விளங்குபவன். மதநீர் ஒழுகுகின்ற யானைக்கு அபயம் அளித்தவன், அழகானவன், ஆயர்க்குடிப் பெண்களின் உள்ளத்திற்குள், பிறருக்கு எளிதில் வசப்படக்கூடிய கண்ணன் வருவானால் கூடலே! நீ கூடுவாயாக. (குழகன் – இளையவன், அழகானவன், பிறருக்கு வசப்படக் கூடியவன்.)

ஊடல் கூடல் உணர்தல் புணர்தலை
நீடுகின்ற நிறைபுகழ் ஆய்ச்சியர்
கூடலைக் குழற்கோதை முன்கூறிய
பாடல் பத்தும் வல்லார்க்கு இல்லை பாவமே. (11)

<u>எளிய உரை :</u> தலைமகன், தலைமகள் இருவரும் கூடும்போது பொய்க் கோபம் கொள்ளுதலும், ஒருவர் உள்ளத்தை ஒருவர் உணர்தலும், உணர்ந்த பின் கூடுதலும் ஆகிய இவற்றில் மூழ்கி நீண்ட நேரம் மகிழ்ச்சியாகக் களிக்கின்ற புகழ்பெற்றவர்கள் ஆய்ச்சியர். இவர்களுடைய கூடலை, மாலை அணிந்த கூந்தலை உடைய கோதையாகிய ஆண்டாள் பாடிய மேற்கூறிய பாடல்கள் பத்தும் பாடும் வல்லமை பெற்றவர்களுக்கு பாவங்கள் எதுவும் வருவதில்லை.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

*

ஐந்தாம் திருமொழி – மன்னுபெரும்புகழ்

*(காதல் வசப்பட்ட பெண் தனது தலைவனாகிய கண்ணனைக் கூவி அழைக்கும்படிக் குயிலுக்குக் கூறுதல்)*

எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

ஆனந்த பைரவி இராகம் – ஆதிதாளம்

மன்னு பெரும்புகழ் மாதவன்
மாமணி வண்ணன் மணிமுடி மைந்தன்
தன்னை உகந்தது காரணமாக
என்சங் கிழக்கும் வழக்குண்டே
புன்னை குருக்கத்தி ஞாலம் செருந்திப்
பொதும்பினில் வாழும் குயிலே!
பன்னி எப்போதும் இருந்து விரைந்துஎன்
பவள வாயன்வரக் கூவாய். (1)

<u>எளிய உரை :</u> புன்னை, குருக்கத்தி, குங்கும மரம், வாள்கோதை ஆகிய தாவரங்கள் நிறைந்த சோலையில் வாழும் குயிலே! நிலைபெற்ற பெரும்புகழ் பெற்ற மாதவன் மணிவண்ணன், மணிமுடி சூடிய வீரனாகிய கண்ணன் தன்னை இடையறாது நினைத்த காரணத்தால் எனது கைகளில் அணிந்த வளையல்கள் சுழன்று விடுகின்றன. ஆகவே குயிலே! எனது பவளவாயன் விரைந்து வரும்படிக் கூவுவாயாக.

வெள்ளை விளிசங்கு இடங்கையில் கொண்ட
விமலன் எனக்கு உருக்காட்டான்
உள்ளம் புகுந்து என்னை நைவித்து
நாளும் உயிர்பெய்து கூத்தாட்டுக் காணும்
கள்ளவிழ் செண்பகப்பூ மலர்கோதிக்
களித்து இசைபாடும் குயிலே!
மெள்ள விருந்து மிழற்றி மிழற்றாதுஎன்
வேங்கடவன் வரக் கூவாய். (2)



<u>எளிய உரை :</u> தேன் சிந்துகின்ற செண்பக மலர்களைக் கோதிவிட்டு மகிழ்ந்து இசைபாடுகின்ற குயிலே! வெண்மையான, பிறரை அழைக்கின்ற சங்கைத் தனது இடது கையில் ஏந்திய விமலன் எனக்குத் தனது திருவுருவத்தைக் காட்டாமல் உள்ளான். ஆனால் எனது உள்ளத்தில் புகுந்து என்னை வருத்தம் அடையும்படிச் செய்து தினமும் பெருமூச்சடையச் செய்து, கூத்தாட வைத்துக் காணுகிறான். குயிலே! நீ அவன் இருப்பிடத்திற்குச் சென்று நான்படும் துன்பங்களை அவனுக்கு எடுத்துச் சொல்லி, உனது சுயபுராணத்தைக் கூறாமல் எனது வேங்கடவன் என்னிடம் வரக் கூவுவாயாக.

*மாதலி தேர்முன்பு கோல் கொள்ள*
*மாயன் இராவணன்மேல் சரமாரி*
*தாய்தலை அற்றற்று வீழத் தொடுத்த*
*தலைவன் வரஎங்கும் காணேன்*
*போதலர் காவில் புதுமணம் நாறப்*
*பொறிவண்டின் காமரம் கேட்டுஉன்*
*காதலியோடு உடன்வாழ் குயிலே! என்*
*கருமாணிக்கம் வரக் கூவாய்.* (3)

<u>எளிய உரை :</u> மாதலி என்பவன் இந்திரனுடைய தேரோட்டி ஆவான். இவனது தேரின் முன்பு இராவணன் தனது அப்புகளைப் பாய்ச்சினான். அப்போது இராமன், இராவணனுடைய தலைகள் அற்று விழத் தனது அம்புகளைத் தொடுத்தான். அப்படிப்பட்ட இராமன், கண்ணனாகப் பிறந்தான். அவன் எங்கிருந்தும் வரக்காணவில்லை. மலர்கள் நிறைந்து பூத்து நறுமணம் வீசும் சோலையில், புள்ளிகள் உள்ள வண்டுகள் இசைக்கின்ற 'காமரம்' என்னும் பண்ணுடன் கூடிய இசையைக் கேட்டு, உனது துணையுடன் மகிழ்ச்சியாக இருக்கும் குயிலே! எனது மாணிக்கம் போன்ற நீல நிறமுள்ள கண்ணன் வரும்படிக் கூவுவாயாக.

*என்புருகி இனவேல் நெடுங் கண்கள்*
*இமைபொ ருந்தா பலநாளும்*
*துன்பக் கடல்புக்கு வைகுந்தன் என்பதோர்*
*தோணி பெறாது உழல்கின்றேன்*





*அன்புடை யாரைப் பிரிவுறு நோய்*
*அதுநீயும் அறிதி குயிலே!*
*பொன்புரை மேனிக் கருளக் கொடியுடை*
*புண்ணியனை வரக் கூவாய்.* (4)

*எளிய உரை :* குயிலே! அன்புக்குரிய துணைப் பறவையைப் பிரிந்தால் எவ்வளவு துன்பம் ஏற்படும் என்பதை நீ அறிவாய் அல்லவா. எனது தலைவனின் பிரிவால் உடல் இளைத்து, எனது உடலில் உள்ளே இருக்கக் கூடிய எலும்புகளும் உருகும் நிலை ஏற்பட்டுவிட்டது. எனது நீண்ட இருகண்களும் இமை மூடித் தூங்கிப் பல நாட்கள் ஆகின்றன. நானோ துன்பக் கடலில் மூழ்கிவிட்டேன். நான் கரை சேர வேண்டுமானால் 'வைகுந்தன்' என்னும் படகு தேவை. அது எனக்குக் கிடைக்கவில்லை.

இப்பாடலில் நான்காம் அடியை பொன்புரை மேனிக் கருடக் கொடியுடைப் புண்ணியனை வரக் கூவாய் என்று கொண்டு, பொன் போன்ற மேனியையும், கருடக் கொடியையும் உடைய புண்ணியனான திருமாலை வரும்படிக் கூவி அழைப்பாயாக என்று பொருள் கொள்வது பொருத்தமாக உள்ளது. தலைமகனைப் பிரிந்து தலைவி துன்பக் கடலில் மூழ்கி இருப்பதால் 'பொன்புரை மேனி' என்பது தலைவிக்குப் பொருந்தாது. துன்பத்தைக் கடலாகவும், வைகுந்தனைத் தோணியாகவும் உருவகமாகக் கூறப்பட்டுள்ளது.

மென்னடை அன்னம் பரந்து விளையாடும்
வில்லி புத்தூர் உறைவான்தான்
பொன்னடி காண்பதோ ராசையி னால்என்
பொருகயல் கண்ணினை துஞ்சா
இன்னடிசி லோடு பாலமு தூட்டி
எடுத்தஎன் கோலக் கிளியை
உன்னொடு தோழமை கொள்ளுவன் குயிலே!
உலகளந் தான்வரக் கூவாய். (5)



<u>எளிய உரை :</u> குயிலே! இனிய உணவும், பாலமுதமும் ஊட்டி வளர்த்த எனது அழகிய கிளியை உன்னுடன் நட்பு கொள்ளுபடிச் செய்வேன். நீ எனக்கு ஓர் உதவி செய்வாயாக. மென்மையான அன்னங்கள் விளையாடுகின்ற வில்லிபுத்தூரில் வாழ்கிறவனுடைய பொன்னடிகளைக் காணவேண்டும் என்னும் ஆவலினால் எனது இரு கண்களும் தூங்காமல் உள்ளன. ஆகவே குயிலே! உலகளந்தவனாகிய திருமால் என்னிடம் வருமாறு நீ கூவி அழைப்பாயாக.

*எத்திசையும் அமரர் பணிந்து ஏத்தும்*
*இருடீ கேசன் வலிசெய்ய*
*முத்தன்ன வெண்முறுவல் செய்ய வாயும்*
*முலையும் அழகழிந் தேன்நான்*
*கொத்தலர் காவில் மணித்தடம் கண்படை*
*கொள்ளும் இளங்குயி லேஎன்*
*தத்துவ னைவரக் கூ கிற்றி யாகில்*
*தலையல் லால்கைம் மாறிலேனே.* (6)

<u>எளிய உரை :</u> எல்லாத் திசைகளிலும் இருக்கக் கூடிய தேவர்களும் முனிவர்களும் பணிந்து வணங்குகின்ற திருமால் எனக்குக் காட்சி தராமல் எனக்குத் துன்பம் தந்தான். சிவந்த வாயும், மார்பகங்களும் அழகழிந்தன. கொத்தாக மலர்ந்த மலர்கள் நிறைந்த அழகிய இடத்தில் கண்ணுறங்குகின்ற இளம் குயிலே! எனது தலைவனாகிய அறிவில் சிறந்தவன் வருமாறு கூவுவாயாக. அவ்வாறு நீ எனக்கு உதவி செய்தால் எனது தலையை உனது பாதங்களில் வைத்து வணங்குவேன். வேறு கைம்மாறு செய்யும் வழி எனக்குப் புலப்படவில்லை.

*பொங்கிய பாற்கடல் பள்ளி கொள்வானைப்*
*புணர்வதோர் ஆசையினால் என்*
*கொங்கை கிளர்ந்து குமைத்துக் குதுகலித்து*
*ஆவியை ஆகுலம் செய்யும்*

*அங்குயிலே! உனக் கென்ன மறந்துறைவு*
*ஆழியும் சங்கும் ஒண்தண்டும்*
*தங்கிய கையவ னைவரக் கூவில் நீ*
*சாலத் தருமம் பெருதி.* (7)

<u>எளிய உரை :</u> பொங்குகின்ற பாற்கடலில் தூங்குகின்றவனாகிய திருமாலைக் கூடவேண்டும் என்னும் ஓர் ஆசையால் எனது மார்பகங்கள் விம்மிப் புடைத்துக் குதூகலம் கொண்டுள்ளன. அந்த ஆவல் எனது உயிரை உருக்கித் துன்பம் செய்கின்றது. அழகிய குயிலே! நீ ஏன் என்முன் வராமல் மறைந்திருக்கிறாய்? சங்கு சக்கரம் ஒளிவீசுகின்ற தண்டாயுதம் ஆகியவற்றைத் தாங்கிய கைகைளையுடையவன் இங்கு வருமாறு நீ கூவுவாயாக. அவ்வாறு நீ கூவினால் என்னிடமிருந்து பரிசுகள் பல பெறுவாய்.

*சார்ங்கம் வளைய வலிக்கும் தடக்கைச்*
*சதுரன் பொருத்த முடையன்*
*நாங்கள் எம்மிலிருந் தொட்டிய கச்சங்கம்*
*நானும் அவனும் அறிதும்*
*தேங்கனி மாம்பொழில் செந்தளிர் கோதும்*
*சிறுகுயி லே!திரு மாலை*
*ஆங்குவிரைந் தொல்லைக் கூகிற்றியாகில்*
*அவனைநான் செய்வன காணே.* (8)

<u>எளிய உரை :</u> தேன்சுவையுடைய மாஞ்சோலையில் உள்ள செந்தளிர்களைக் கோதி விளையாடும் சிறிய குயிலே, எனது அன்புக்கு உரியவனுடைய வில் 'சாரங்கம்'. அந்த சாரங்கம் என்னும் வில்லினை வளைக்கும் வலிமையுடையது அவனது அகன்ற கைகள். எனக்கும் பொருத்தமுள்ளவன். எங்கள் இருவருக்கும் இடையே உள்ள நட்பைப் பற்றி நானும் அவனுமே அறிவோம். குயிலே! திருமாலின் இருப்பிடத்திற்கு விரைந்து சென்று நீ கூவினாயானால் அவன் வருவான். அப்போது நான் அவனிடம் செய்யும் செயல்கள் என்னவென்று நீ காண்பாயாக. எம்மில் + இருந்து + ஒட்டிய + அகச் சங்கம் என்று பிரிக்கலாம். அகச்சங்கம் = அந்தரங்கமான தொடர்பு.



*பைங்கிளி வண்ணன் சிரீதரன் என்பதோர்*
*பாசத்து அகப்பட் டிருந்தேன்*
*பொங்கொளி வண்டிரைக் கும்பொழில் வாழ்குயிலே!*
*குறிக்கொண் டிதுநீ கேள்*
*சங்கொடு சக்கரத் தான்வரக் கூவுதல்*
*பொன்வளை கொண்டு தருதல்*
*இங்குள்ள காவினில் வாழக் கருதில்*
*இரண்டத்தொன்றேல் திண்ணம் வேண்டும்.* (9)

*எளிய உரை :* ஒளி வீசுகின்ற வண்டு ஓசையிடும் சோலையில் வாழ்கின்ற குயிலே! பசுமையான கிளியின் வண்ணமுடைய சிரீதரனின் காதலில் அகப்பட்டு இருக்கிறேன். நான் சொல்வதை நன்றாகக் கேட்பாயாக. நீ இந்தச் சோலையில் வாழ விரும்பினால் நான் வேண்டும் இரண்டில் ஒன்றை எனக்காகச் செய்தல் வேண்டும். ஒன்று சங்கும் சக்கரமும் ஏந்திய எனது தலைவன் இங்கு வந்து சேரும்படிக் கூவவேண்டும். அல்லது அவனது பிரிவால் நான் பறிகொடுத்த வளையலைக் கொண்டு வந்து தருதல் வேண்டும். இந்த இரண்டில் ஒன்றைக் குயில் செய்யவில்லையானால் சோலையில் அது வாழ இடமில்லை என்பதாம்.

*அன்றுலக மளந்தானை யுகந்து*
*அடிமைக் கணவன் வலிசெய்ய*
*தென்றலும் திங்களும் ஊடறுத்து*
*என்னை நலியும் முறைமை அறியேன்*
*என்றும் இக்காவில் இருந்திருந்து*
*என்னைத் ததைத்தாதே நீயும் குயிலே*
*இன்று நாராயணனை வரக்கூ வாயேல்*
*இங்குற்று நின்றும் துரப்பன்.* (10)

*எளிய உரை :* ஒரு சமயம், உலகை அளந்தவனாகிய திருமாலை நினைத்து, அவனைக் கணவனாக அடைய வேண்டுமென்று இந்த அடிமை நினைத்து வருந்துகிறேன். அப்படி இருக்கும்போது தென்றல் காற்றும், நிலவும் என்னை ஊடுருவிக்கொண்டு

எனக்குத்துன்பம் செய்வது முறையாகுமோ? நான் அறியக் கூடவில்லை. நீயோ, என்றும் இச்சோலையில் நான்படும் துன்பங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறாயே ஒழிய அவனை அழைத்துவர எந்த முயற்சியும் எடுக்காமல் நீயும் என்னைத் துன்புறுத்துகிறாய். குயிலே! அவன் இங்கு வரும்படிக் கூவாமல் போனால் இந்தச் சோலையிலிருந்தும் உன்னைத் துரத்திவிடுவேன்.

*விண்ணுற நீண்டு அடிதாவிய மைந்தனை*
*வேற்கண் மடந்தை விரும்பி*
*கண்ணுற என்கடல் வண்ணனைக்கூவு*
*கருங்குயிலே என்ற மாற்றம்*
*பண்ணுற நான்மறையோர் புதுவை மன்னன்*
*பட்டர்பிரான் கோதை சொன்ன*
*நண்ணு வாசக மாலை வல்லார்*
*நமோ நாராயணாய என்பாரே.* (11)

*<u>எளிய உரை :</u>* கருங்குயிலே, வானம் முழுவதையும் தனது திருவடிகளால் அளந்த மைந்தனை (வீரனை) வேல்போன்ற கண்களையுடைய நான் விரும்பிக் காணத் துடிக்கிறேன். கடல் போன்ற நீல நிறம் கொண்டவனைக் கூவி அழைப்பாயாக. பண்ணுடன் கூடிய நான்கு வேதங்களையும் ஓதும் அந்தணர்கள் வாழும் புதுவை மன்னன் பட்டர் பிரானுடைய கோதை சொன்ன மேற் குறிப்பிடப்பட்ட பாடல்களில் வல்லவர்கள், நமோ நாராயணாய என்று கூறியவர்கள் பெறும் பயனைப் பெறுவார்கள்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

*



ஆறாம் திருமொழி – வாரணமாயிரம்

(மாயவனை திருமணம் செய்து கொள்வதாகத் தான் கண்ட கனவை தலைவி தனது தோழிகளுக்குக் கூறுவது போல அமைந்துள்ளது இப்பகுதி)

கலிவிருத்தம்

கல்யாணி இராகம் – ரூபகதாளம்

வாரண மாயிரம் சூழ வலஞ்செய்து
நாரண நம்பி நடக்கின்றா னென்றெதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீ! நான். (1)

<u>எளிய உரை :</u> ஆயிரம் யானைகள் சூழ்ந்து ஊர்வலம் வர நாராயணன் என்னும் தலைவன் எனது எதிரே நடந்து வருகின்றான். பூரண பொற்குடம் வைக்கவும், ஊரெங்கும் தோரணம் கட்டவும் நான் கனவு கண்டேன்.

நாளை வதுவை மணமென்று நாளிட்டு
பாளை கமுகு பரிசுடைப் பந்தற்கீழ்
கோளரி மாதவன் கோவிந்த னென்பானோர்
காளை புகுதக் கனாக்கண்டேன் தோழீ! நான். (2)

<u>எளிய உரை :</u> தோழீ! நாளைக்குத் திருமணம் என்று நாள் நிச்சயிக்கப்பட்டது. தென்னம்பாளைகள், பாக்குக்குலைகள் ஆகியவை கட்டப்பட்ட அழகான பந்தலின் கீழ் நரசிம்மமாக அவதாரம் செய்த மாதவன் என்றும் கோவிந்தன் என்றும் அழைக்கப்படும் ஒரு காளை புகும்படிக் கனவு கண்டேன். பரிசு – பெருமை, கோளரி – சிங்கம், கோவிந்தன் – ஆநிரைகளைக் காப்பவன், காளை – வாலிபன்.

இந்திரன் உள்ளிட்ட தேவர்குலாம் எல்லாம்
வந்திருந்து என்னை மகட்பேசி மந்திரித்து
மந்திரக் கோடி யுடுத்தி மணமாலை
அந்தரி சூட்டக் கனாக்கண்டேன் தோழீ! நான். (3)

<u>எளிய உரை :</u> தோழீ! இந்திரன் உட்பட்ட அனைத்துத் தேவர்களின் கூட்டமும் வந்திருந்தது. திருமாலுக்கு இவளை மணம் செய்வது என்று உறுதி செய்து பேசி ஆலோசித்து முடிவு செய்து, பூசையில் வைக்கப்பட்ட புதிய ஆடைகளை எனக்கு உடுத்தினர். பிறகு திருமாலின் தங்கையாகிய துர்க்கை மணமாலை சூட்டக் கனவு கண்டேன். இந்திரன் — தேவர்களின் தலைவன், மந்திரித்தல் — ஆலோசித்தல், அந்தரி — துர்க்கை (பார்வதி), மந்திரக் கோடி — பூசையில் வைத்து வழிபாடு செய்யப்பட்ட புத்தாடை.

*நால்திசைத் தீர்த்தம் கொணர்ந்து நனிநல்கி*
*பார்ப்பனச் சிட்டர்கள் பல்லார் எடுத்தேத்தி*
*பூப்புனை கண்ணிப் புனிதனோடு என்தன்னை*
*காப்புநாண் கட்டக் கனாக்கண்டேன் தோழீ! நான்.* (4)

<u>எளிய உரை :</u> தோழீ! நான்கு திசைகளிலும் இருந்தும் புனிதநீர் கொண்டுவந்து சேர்த்தனர். கல்வியும் ஒழுக்கமும் நிரம்பப் பெற்ற அந்தணர்கள் பலர் வழிபாடு நடத்தினர். பூக்களைக் கொண்டு கட்டப்பட்ட மாலையணிந்த தூய்மையானவனுக்கும், எனக்கும் காப்புக் கயிறு கட்டுவது போலக் கனவு கண்டேன்.

*கதிரொளி தீபம் கலசமுடன் ஏந்தி*
*கதிரிள மங்கையர் தாம்வந்து எதிர்கொள்ள*
*மதுரையார் மன்னன் அடிநிலை தொட்டுஎங்கும்*
*அதிரப் புகுதக் கனாக்கண்டேன் தோழீ! நான்.* (5)

<u>எளிய உரை :</u> பெருமை பொருந்திய பெண்கள் ஒளி வீசுகின்ற தீபங்களையும், கலசங்களையும் ஏந்திக் கொண்டு மணமகனாகிய மதுரை நகரின் அரசனை எதிர்கொண்டு வரவேற்றனர். அவன் தனது கால்களில் காலணிகளைத் தாங்கி எங்கும் அதிரும்படிப் புகுந்தான். இவ்வாறு நான் கனவு கண்டேன்.

*மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத*
*முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்*
*மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்துஎன்னை*
*கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழீ! நான்.* (6)



<u>எளிய உரை :</u> தோழீ! மத்தளம் கொட்டப்பட்டது. வரிகள் பொருந்திய சங்கு ஊதப்பட்டது. முத்துமாலைகள் கொண்டு அழகு படுத்தப்பட்ட பந்தலில் மைத்துனனாகிய தலைவன் மதுசூதனன் வந்து எனது கையைப் பிடிப்பது போலக் கனவு கண்டேன்.

*வாய்வல்லார் நல்ல மறையோதி மந்திரத்தால்*
*பாசிலை நாணல் படுத்துப் பரிதிவைத்து*
*காய்சின மாகளிறு அன்னான்என் கைப்பற்றி*
*தீவலஞ் செய்யக் கனாக்கண்டேன் தோழீ! நான்.* (7)

<u>எளிய உரை :</u> தோழீ! உண்மையே பேசுகின்றவர்கள் நல்ல வேதங்களை ஓதினார்கள். பசுமையான இலைகளையுடைய நாணல்புல்லைப் பரப்பினார்கள். புனித சக்கரங்களையும் அந்த மணவறையில் அமைத்தார்கள். அப்போது மதம் கொண்ட ஆண்யானையைப் போன்றவன் எனது கைப்பிடித்துத் தீவலம் செய்யக் கனவு கண்டேன். பாசிலை நாணல் — தருப்பைப்புல், பரிதி — புனித சக்கரம், தீவலம் வருதல் — யாகக் குண்டத்தைச் சுற்றி வருதல்.

*இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றாவான்*
*நம்மை உடையவன் நாராயணன் நம்பி*
*செம்மை யுடைய திருக்கையால் தாள்பற்றி*
*அம்மி மிதிக்கக் கனாக்கண்டேன் தோழீ! நான்.* (8)

<u>எளிய உரை :</u> தோழீ! இந்தப் பிறவிக்கும் மற்றும் ஏழேழு பிறவிகளுக்கும் நம்மை உரிமையாக்கிக் கொண்டவன் நாராயணன் என்னும் நம்பி. அவன் தனது செம்மையுடைய திருக்கைகளால் எனது கால்களை எடுத்து அம்மியில் வைத்து மிதித்திடக் கனவு கண்டேன்.

*வரிசிலை வாள்முகத்து என்ஐமார்தாம் வந்திட்டு*
*எரிமுகம் பாரித்து என்னைமுன்னே நிறுத்தி*
*அரிமுகன் அச்சுதன் கைமேல் என் கைவைத்து*
*பொரிமுகந் தட்டக் கனாக்கண்டேன் தோழீ!நான்.* (9)

<u>எளிய உரை :</u> தோழீ! வரிவரியாக அழகு செய்யப்பட்ட ஒளி பொருந்திய முகத்தையுடைய எனது உடன் பிறந்த அண்ணன்மார்கள் வந்து, எரியும் யாகக் குண்டத்திற்கு முன்பு என்னை நிறுத்தினார்கள். நரசிங்கமாக ஒருசமயம் அவதாரம் செய்த அச்சுதனின் கைமேல் எனது கையை வைத்தனர். பிறகு அட்சதை அரிசியை அள்ளி வீசி வாழ்த்தினர். இக்காட்சியை எனது கனவில் கண்டேன். (ஐ—தந்தை என்றும், அண்ணன் என்றும் இரு பொருள் உண்டு. இங்கு அண்ணன்மார் என்றே பொருள் கொள்ளப்பட்டது. காரணம் என் + ஐமார் என்று பன்மையில் கூறப்பட்டதாலும், தந்தை ஒருவரே என்பதாலும் அண்ணன்களையே குறிப்பிடும்.) அரி — சிங்கம், அரிமுகன் — நரசிம்மன், 'பொரிமுகந்து அட்ட' என்னும் இப்பாடலின் கடைசி வரிக்கு பொரியை அள்ளிப் பரிமாற, என்று சிலர் பொருள் கூறுகிறார்கள். இது பொருத்தமான பொருள் அல்ல. மஞ்சள் அரிசியைத் தெளித்து வாழ்த்துவது வழக்கம். ஆகவே இதுவே பொருத்தமாகத் தெரிகிறது.

குங்குமம் அப்பிக் குளிர்சாந்தம் அட்டித்து
மங்கல வீதிவலம் செய்து மணநீர்
அங்கு அவனோடும் உடன்சென்று அங்கானைமேல்
மஞ்சனம் ஆட்டக் கனாக்கண்டேன் தோழீ! நான். (10)

<u>எளிய உரை :</u> தோழீ! குங்குமத்தை எடுத்து உடம்பில் பூசி, குளிர்ந்த சந்தனத்தையும் தடவி கண்ணனுடன் என்னை அழைத்துச் சென்று யானையின்மேல் அமரச் செய்து திருமஞ்சனம் செய்வதாகக் கனவு கண்டேன்.

ஆயனுக் காகத் தான்கண்ட கனாவினை
வேயர்புகழ் வில்லிபுத்தூர்க்கோன் கோதைசொல்
தூய தமிழ்மாலை ஈரைந்தும் வல்லவர்
வாயும் நன்மக்களைப் பெற்று மகிழ்வரே. (11)

<u>எளிய உரை :</u> ஆயர்குலத்திலே உதித்த கண்ணனுடன் தொடர்புபடுத்தித் தான் (ஆண்டாள்) கண்ட கனவை வேடர்களால் புகழப்பட்ட, வில்லிபுத்தூரின் தலைவரான



*பெரியாழ்வாரின் கோதை சொன்ன தூய்மையான தமிழால் தொடுக்கப்பட்ட இந்தப் பாமாலையாகிய பத்துப் பாடல்களிலும் வல்லவர்கள் சிறந்த குழந்தைச் செல்வங்கள் பெற்று மகிழ்ச்சியுடன் வாழ்வார்கள். ஆண்டாள் வாழ்ந்த காலத்தில் நடைமுறையில் இருந்த திருமணமுறை இப்பாசுரங்களின் மூலம் அறியலாம்.*

*ஆண்டாள் திருவடிகளே சரணம்.*

*

ஏழாம் திருமொழி — கற்பூரம் நாறுமோ

திருமாலின் ஐந்து ஆயுதங்களாவன : சங்கு, சக்கரம், வில், வாள், கதை. சங்கு 'பாஞ்ச சன்னியம்' என்று அழைக்கப்படுகிறது. இச்சங்கு இப்பாடல்களில் திருமாலுடன் நெருங்கிய சுற்றமாகப் பேசப்படுகிறது.

தரவு கொச்சகக் கலிப்பா
வராளி இராகம் — ரூபகதாளம்

கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ
மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே. (1)

எளிய உரை : திருமாலின் கையிலிருக்கும் வெண்மையான கடல் சங்கே! திருமால் உன்னைத் தனது இதழ்களில் வைத்து ஊதி ஓசையை உண்டாக்குகிறார். ஆகவே, அவருடைய இதழ்களின் சுவை எப்படிப்பட்டது என்று உனக்குத் தான் தெரியும். அவை கற்பூரத்தைப் போன்ற நறுமணம் கொண்டதா? தாமரைப் பூவின் நறுமணம் கொண்டதா? அவரது பவளநிறமுள்ள சிவந்த வாய் தித்திப்புடன் இருக்குமா? 'குவலயா பீடம்' என்னும் யானையின் தந்தங்களை ஒடித்த மாதவனின் வாய்ச்சுவையும் மணமும் (வாசனை) எப்படி இருக்கும் என்னும் ஆவலினால் உன்னிடம் கேட்கிறேன் சங்கே.

கடலில் பிறந்தது கருதாது பஞ்சசனன்
உடலில் வளர்ந்துபோய் ஊழியான் கைத்தலத்
திடரில் குடியேறித் தீயவசுரர்
நடலைப்பட முழுங்கும் தோற்றத்தாய் நற்சங்கே. (2)

எளிய உரை : அழகிய நல்ல சங்கே! நீ கடலில் பிறந்தாய். அதை இழிவாகக் கருதாமல், 'பஞ்சசனன்' உடலில் போய் வளர்ந்தாய். பிறகு என்றும் அழிவற்ற திருமாலுடைய கையில் குடியேறினாய். தீய அசுரர்களைத் துன்பம் செய்யும்படி முழங்குகிறாய்.



தடவரையின் மீதே சரற்காலச் சந்திரன்
இடையுவாவில் வந்து எழுந்தாலே போல நீயும்
வடமதுரையார் மன்னன் வாசுதேவன் கையில்
குடியேறி வீற்றிருந்தாய் கோலப் பெருஞ்சங்கே. (3)

எளிய உரை : அழகான பெரிய சங்கே! அகன்ற மலையின் மீது சரத் கால முழு நிலவு உதயமானால் எப்படி இருக்குமோ அதுபோல, வடமதுரையின் மன்னன் வாசுதேவன் கையில் குடிஏறி அமர்ந்திருக்கிறாய். (தடவரை – திருமாலுக்கும், முழு நிலவு – சங்கிற்கும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. சரற்காலம் – சரத்காலம் தமிழ்மரபுப் பெரும் பொழுதுகளில் கூதிர் காலம். அதாவது ஐப்பசி, கார்த்திகை மாதங்கள்)

சந்திர மண்டலம்போல் தாமோதரன் கையில்
அந்தர மொன்றின்றி ஏறி அவன்செவியில்
மந்திரம் கொள்வாயே போலும் வலம்புரியே!
இந்திரனும் உன்னோடு செல்வத்துக் கேலானே. (4)

எளிய உரை : வலம்புரிச் சங்கே! நிலவு எப்படி எந்தவிதமான பற்றுக் கோடும் இன்றி வானில் உள்ளதோ, அதுபோல நீ திருமாலின் கையில் ஏறி அமர்ந்துள்ளாய். நீ அமர்ந்திருக்கும் திருமாலின் கை அவனது காதுக்கு நேராக உள்ளதால் அவனிடமிருந்து நீ மந்திர உபதேசம் பெறுவது போலக் காணப்படுகிறது. இந்த வாய்ப்பு தேவர்களின் தலைவனாகிய இந்திரனுக்கும் கிடைக்கக் கூடிய வாய்ப்பு அல்ல. ஆகவே உன்னுடைய இடத்தை இந்திரனும் பெற முடியாது.

உன்னோடு உடனே ஒருகடலில் வாழ்வாரை
இன்னார் இனியார் என்று எண்ணுவா ரில்லைகாண்
மன்னாகி நின்ற மதுசூதன் வாயமுதம்
பன்னாளும் உண்கிறாய் பாஞ்ச சன்னியமே! (5)

எளிய உரை : பாஞ்ச சன்னியம் என்று அழைக்கப்படும் சங்கே! உன்னுடன் கடலில் வாழ்கின்ற தீயவர் யார் நல்லவர் யார் என்பவர் எவருமே இல்லை. நிலைபெற்றுள்ள மதுசூதனனாகிய

*திருமாலின் வாயில் ஊறும் அமிழ்தத்தைப் பல காலம் நீ உண்டு வருகிறாய். (அதாவது திருமால் தனது பாஞ்ச சன்னியம் என்னும் சங்கை தனது வாயில் வைத்து ஊதுவதால் அவனது வாயமுதத்தைப் பருகக் கூடிய வாய்ப்பு இச்சங்கிற்குக் கிடைத்துள்ளது. இவ்வாய்ப்பு அவனது துணைவியர்க்கு மட்டுமே கிடைக்கக் கூடிய அரிய வாய்ப்பாகும்.)*

*போய்த்தீர்த்த மாடாதே நின்ற புணர்மருதம்*
*சாய்த்தீர்த்தான் கைத்தலத்தே ஏறிக்குடி கொண்டு*
*சேய்த்தீர்த்த மாய்நின்ற செங்கண்மால் தன்னுடைய*
*வாய்த்தீர்த்தம் பாய்ந்தாட வல்லாய் வலம்புரியே! (6)*

*<u>எளிய உரை</u> : நாரத முனிவருடைய சாபத்தின் காரணமாக நின்ற இரு மருத மரங்கள் (தொலைவிலுள்ள கங்கை முதலிய புனித நீரில் சென்று நீராடாமலேயே) கண்ணனால் சாய்க்கப்பட்டு விழுந்து சாப விமோசனம் பெற்று நளகூபரன், மணிக்ரீவன் என்னும் இரு தேவர்களாக மாறின. அப்படிப்பட்ட திருமாலின் கையில் நீ ஏறிக் குடிகொண்டிருக்கிறாய். தன்னைச் சார்ந்திராதவர்களுக்குத் தொலைவிலுள்ள புனிதநீரைப் போன்ற, சிவந்த கண்களை உடைய திருமாலின் வாயில் ஊறுகின்ற வாய்த்தீர்த்தத்தில் பாய்ந்தாடுகின்ற பேறு பெற்றாய் வலம்புரிச் சங்கே.*

*மேற்குறிப்பிடப்பட்ட தேவர்கள் குபேரனின் மகன்கள். நாதரர் இவர்களின் இருப்பிடத்திற்கு வந்திருந்தபோது மதுமயக்கத்துடன் அரம்பை முதலிய மாதர்களுடன் தடாகத்தில் நீராடுங்கால் ஆடையில்லாமல் மரம்போல் நின்றதாலும், நாரதரை வணங்காமையாலும் உபசரிக்காததாலும் நாரதரிடம் பெற்ற சாபத்தால் மரமாக மாறினார்கள்.*

*செங்கமல நாண்மலர்மேல் தேன் நுகரும் அன்னம்போல்*
*செங்கண் கருமேனி வாசு தேவனுடைய*
*அங்கைத் தலமேறி அன்ன வசம்செய்யும்*
*சங்கரையா! உன் செல்வம் சால அழகியதே (7)*

*<u>எளிய உரை</u> : சிவந்த தாமரை மலரில் தேனைக்குடிக்கும் அன்னப் பறவையைப் போன்ற வெண்மையான சங்குகளின் அரசனே!*



*சிவந்த கண்களும் கரிய மேனியும் உடைய வாசுதேவனுடைய அழகிய கையில் வாசம் செய்கின்றாய். நீ பெற்ற இந்தப் பேறு மிகவும் சிறந்ததாகும்.*

*சங்கு + அரையன் – சங்கரையன், அங்கைத்தலம் – உள்ளங்கை, நாள் மலர் – நாண்மலர் – அன்றலர்ந்த மலர். சிவந்த தாமரைமலர் திருமாலின் உள்ளங்கைக்கும், வெண்மையான அன்னப்பறவை வெண்மையான சங்கிற்கும் உவமையாகக் கூறப்பட்டன.*

*உண்பது சொல்லில் உலகளந்தான் வாயமுதம்*
*கண்படை கொள்ளல் கடல்வண்ணன் கைத்தலத்தே*
*பெண்படையார் உன்மேல் பெரும்பூசல் சாற்றுகின்றார்*
*பண்பல செய்கின்றாய் பாஞ்ச சன்னியமே. (8)*

*<u>எளிய உரை :</u> பாஞ்ச சன்னியமே! நீ உண்ணும் உணவு எது என்றால், உலகளந்த திருமாலின் வாயிலே ஊறுகின்ற அமுதம். நீ கண்ணுறக்கம் கொள்ளும் இடம் எது என்றால் கடலின் நீல நிறம் கொண்ட அவனது கையில். ஆகவே அவனது நினைவில் ஏங்கும் பெண்களின் படை (கூட்டம்) உன்மேல் வருத்தம் கொள்கிறார்கள். இவ்வாறு பண்பு அல்லாத செயல்கள் செய்கிறாய்.*

*பதினாறா மாயிரவர் தேவிமார் பார்த்திருப்ப*
*மதுவாயில் கொண்டாற்போல் மாதவன்தன் வாயமுதம்*
*பொதுவாக உண்பதனைப் புக்குநீ யுண்டக்கால்*
*சிதையாரோ உன்னோடு? செல்வப் பெருஞ்சங்கே! (9)*

*<u>எளிய உரை :</u> செல்வங்கள் நிரம்பப் பெற்ற பெருமை பொருந்திய சங்கே! பதினாறாயிரம் மனைவியர் கண்ணனுடைய வாயில் ஊறுகின்ற அமிழ்தத்தை உண்ண வேண்டுமென்று நினைத்து அதற்குரிய வாய்ப்பை எதிர்பாத்திருக்கிறார்கள். அப்படியிருக்க மதுவை உண்டவர்கள் மயங்கிக் கிடப்பது போல கண்ணனின் வாயமுதத்தை உண்டு அதிலேயே மயங்கிக் கிடக்கிறாய் நீ. கண்ணனின் வாயமுதம் அனைவருக்கும் பொதுவானது என்பதை நீ மறந்தாய் போலும். இதைக்கண்டு உன்மேல் மற்றவர்கள் மன வருத்தம் கொள்ளமாட்டார்களா? கூறுவாயாக.*

*பாஞ்ச சன்னியத்தைப் பற்பநாப னோடும்*
*வாய்ந்த பெருஞ்சுற்றம் ஆக்கிய வண்புதுவை*
*ஏய்ந்தபுகழ் பட்டர்பிரான் கோதைதமிழ் ஈரைந்தும்*
*ஆய்ந்தேத்த வல்லார் எவரும் அணுக்கரே.* (10)

*எளிய உரை :* பாஞ்ச சன்னியம் என்னும் சங்கை திருமாலுடன் பெரும் சுற்றமாகக் கருதிப் பாடியவள் ஆண்டாள். இவள் வளமையான வில்லிபுத்தூரில் வாழ்கின்ற பட்டர் பிரானுடைய கோதை ஆவாள். இந்தக் கோதை பாடிய பத்துப் பாடல்களையும் ஆராய்ந்து பாடித் திருமாலை வணங்குபவர் எவராக இருந்தாலும் நமக்கு அருகில் இருப்பவரே ஆவார்கள். (கண்ணனுடைய மனைவிமார் பதினாறு ஆயிரம் பேர் என்பது மரபு. பற்மநாபன் – திருமால், புதுவை – வில்லிபுத்தூர்.)

மேற்குறிப்பிடப்பட்ட பாசுரங்களில் திருமாலின் பாஞ்சசன்னியம் என்னும் சங்கினைத் தொடர்பு படுத்திப் பேசுகிறாள் ஆண்டாள். திருமாலின் சங்கு பிறந்ததற்கான புராணச் செய்தி இது: இச்சங்கு 'பஞ்சசனன்' என்னும் அரக்கனுடைய எலும்புகளால் ஆனது. பஞ்சஜனன் என்னும் அரக்கன், கண்ணனுடைய ஆசிரியராகிய 'சாந்தீபினி' முனிவருடைய மகனைக் கடத்திச் சென்று தனது இருப்பிடமாகிய 'ப்ரபாஷா' என்னும் கடலின் அடிப்பகுதியில் சிறை வைத்தான். இதை அறிந்த கண்ணன் அந்தக் கடலின் அடிப்பகுதிக்குச் சென்றான். அப்போது பஞ்சஜனன் என்னும் அரக்கன் தனது எலும்புகளைக் கண்ணனுக்குத் தந்தான். அதைக் கொண்டு கண்ணன் தனது சங்கை உருவாக்கித் தன்னுடைய கையில் வைத்துக் கொண்டான். இதுவே பாஞ்சசன்னியம் என்னும் சங்கு பிறந்த கதையாகும். அன்புடையார் என்பும் (எலும்பும்) உரியர் பிறர்க்கு என்னும் திருக்குறளை இங்கு ஒப்புநோக்கி மகிழ்க.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

*



## எட்டாம் திருமொழி – விண்ணீல மேலாப்பு மேகவிடு தூது

தரவு வந்தி ராகம் – ஆதிதாளம்

விண்ணீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்!
தெண்ணீர்பாய் வேங்கடத்து என் திருமாலும் போந்தானே
கண்ணீர்கள் முலைக்குவட்டில் துளிசோரச் சோர்வேனை
பெண்ணீர்மை ஈடழிக்கும் இதுதமக்கு ஓர் பெருமையே. (1)

எளிய உரை : மேகங்களே! நீல நிறமான வானத்தின் நிறம் உங்களுக்கு மேலாக்குப் போட்டது போலக் காணப்படுகிறது. தெளிந்த நீர்பாய்கின்ற ஓடைகள் உள்ள வேங்கட மலைக்கு எனது தலைவனாகிய திருமாலும் வந்தானா? (இல்லையே) எனது கண்களில் இருந்து வழிகின்ற கண்ணீர் எனது மார்பகங்களின் உச்சியில் துளித்துளியாகச் சொரிகிறது. இது ஒரு பெண்ணின் ஒழுக்கத்திற்கு மாசுபடுத்துவதாக உள்ளது. இது அந்தத் திருமாலுக்கு பெருமையாக உள்ளது போலும்.

காதல் வசப்பட்ட ஆண் அல்லது பெண் அன்புக்கு உரியவரிடம் தூது அனுப்பப் பத்துப் பொருள்கள் மரபு வழியாகக் கூறப்பட்டு வருகின்றன. அவை அன்னப்பறவை, மயில், கிளி, மேகம், நாகணவாய்ப்பறவை, தோழி, குயில், நெஞ்சு, நெல், புகையிலை ஆகியவையும் கூடத் தூதுப் பொருள்களாக வைத்துப் பாடப்பட்டுள்ளது. தூதுவிடப்படும் பொருள்கள் காதல் வசப்பட்டவர்களின் ஏக்கத்தை காதலர்களிடம் போய் நிச்சயம் கூறாது. இருப்பினும் மனதிலுள்ள ஏக்கங்களை காதலர் மனம்விட்டுக் கூற ஒரு பொருளை அனுப்புவதாக இலக்கியம் படைப்பது கவிஞர் கற்பனை ஆகும்.

மாமுத்த நிதிசொரியும் மாமுகில்காள்! வேங்கடத்துச்
சாமத்தி நிறம்கொண்ட தாளாளன் வார்த்தை என்னே
காமத்தீயுள் புகுந்து கதுவப்பட்டு இடைக்கங்குல்
ஏமத்தோர் தென்றலுக்கிங்கு இலக்காய் நான் இருப்பேனே. (2)

எளிய உரை : பெரிய முத்துமுத்தான மழைச் செல்வத்தைச்





சொரிகின்ற பெரிய மேகங்களே! வேங்கட மலையில் பூத்துள்ள சாமந்தி மலர்களின் நிறம் கொண்ட முயற்சியை உடைய திருமால் எனக்குக் கூறிய சொல் என்ன? இப்போது நான் காமமாகிய நெருப்பில் புகுந்து அழிந்தேன். நடு இரவில் தென்றல் காற்றுக்கும் நான் இலக்காகித் துன்பமடைகிறேன். 'தாளாளன் சொன்ன வார்த்தை' என்று இப்பாடலில் தலைவி குறிப்பிடுவது தலைமகனாகிய திருமால், இன்ன இடத்தில், குறிப்பிட்ட நேரத்தில் வந்து தலைவியைச் சந்திப்பதாகக் கூறிய வார்த்தை. அந்த வார்த்தையை நம்பி தலைவி அங்கு வந்ததாகவும் அவன் சொன்ன சொல்லைக் காப்பாற்ற வில்லையே என்றும் தனது ஏக்கத்தை மேகத்திடம் கூறி அவனிடம் போய்க் கூறும்படி மேகத்தை வேண்டுகிறாள் அவள்.

காமத்தீ – காமமாகிய நெருப்பு. இந்நெருப்பில் மூழ்கிய அவள் மீண்டுவர வேண்டுமானால், வேங்கடவன் பெய்யெனப் பெய்யும் மழையாக வந்து அவளுடைய காமத்தீயைக் குளிர்விக்க வேண்டும். இப்பாடலின் முதல் அடியில் மேகங்களை மாமுத்த நிதிசொரியும் மாமுகில்காள் என்று தலைவி குறிப்பிடுவது, காமத்தீயிலிருந்து தன்னைமழை போல் வந்து திருமால் காப்பாற்றவில்லையே என்று அவனது செயலைத் தாழ்த்தி, மேகங்கள் அஃறிணைப் பொருளாக இருந்தாலும் வேங்கட மலையில் மழையைச் சொரிந்து குளிர்விக்கின்றனவே என்று அவற்றை உயர்த்தியும் கூறுவதை ஒப்பு நோக்கி மகிழ்க. இப்பாடலை ஊன்றிப் படிப்பவர்களுக்கு மட்டுமே அந்நயம் புலப்படும்.

ஒளிவண்ணம் வளைசிந்தை உறக்கத்தோடு இவையெல்லாம்
எளிமையால் இட்டுஎன்னை ஈடழியப் போயினவால்
குளிரருவி வேங்கடத்தென் கோவிந்தன் குணம்பாடி
அளியத்த மேகங்காள்! ஆவிகாத் திருப்பேனே. (3)

<u>எளிய உரை :</u> வள்ளல்கள் போல மழையை வாரி வழங்கக்கூடிய மேகங்களே! திருமாலின் மீது நான் கொண்ட காதலினாலும், சொன்ன சொல்லை அவன் காப்பாற்றாமல் போனதாலும் முன்பு எனது உடலில் வீசிக்கொண்டிருந்த ஒளியையும், நிறத்தையும்,



கைவளையல்களையும், மனதையும், தூக்கத்தையும் இழக்க நேர்ந்தது. இப்போது நான் எளிமைக் கோலத்தில் மன வேதனையுடன் காணப்படுகிறேன். இவ்வாறு கோவிந்தன் என்னை வேதனை கொள்ளும்படிச் செய்தாலும் நான் அவனது குணநலன்களைப் பாடி எனது உயிரை உடலை விட்டுப் போகாமல் பாதுகாத்திருப்பேன். கோவிந்தன் நினைவால் அவளது உயிரைத்தவிர அனைத்தையும் இழந்துவிட்டாள் என்பது மேற்காணும் பாடலில் இருந்து தெரிய வருகிறது.

*மின்னாகத் தெழுகின்ற மேகங்காள்! வேங்கடத்துத்*
*தன்னாகத் திருமங்கை தங்கியசீர் மார்வர்க்கு*
*என்னாகத் திளங்கொங்கை விரும்பித்தாம் நாள்தோறும்*
*பொன்னாகவும் புல்குதற்குஎன் புரிவுடைமை செப்புமினே. (4)*

<u>எளிய உரை :</u> மின்னலுடன் கூடி எழுகின்ற மேகங்களே! திரு என்னும் மங்கையாகிய திருமகளை தனது மார்பில் தாங்கி இருக்கிறார் திருமால். அவருடைய அழகிய மார்பினை எனது இளம் மார்பங்களால் தினமும் தழுவ விரும்புகிறேன். மேகங்களே! எனது விருப்பத்தை அவரிடம் கூறுவீர்களாக. (மின் — மின்னல், ஆகம் — மார்பகம், திருமங்கை — திருமகள், கொங்கை — மார்பகம், புல்குதல் — தழுவுதல், புரிவு — விருப்பம்).

*வான்கொண்டு கிளர்ந்தெழுந்த மாமுகில்காள், வேங்கடத்துக்*
*தேன்கொண்ட மலர்சிதறத் திரண்டேறிப் பொழிவீர்காள்*
*ஊன்கொண்ட வள்ளுகிரால் இரணியனை உடலிடந்தான்*
*தான்கொண்ட சரிவளைகள் தருமாகில் சாற்றுமினே. (5)*

<u>எளிய உரை :</u> மழைநீரைத் தாங்கி, மழை பெய்வதற்காகக் கிளர்ந்து எழுந்த பெரிய மேகங்களே! வேங்கட மலையில் பூத்துள்ள தேன் நிரம்பிய மலர்கள் சிதறும்படி மழை பொழியுங்கள். சதைப் பற்றுடனே கூடிய கூர்மையான நகங்களால் இரணியன் என்னும் அரக்கனுடைய உடலைக் கிழித்துச் சாய்த்தவன் திருமால். அவன் பிரிவால் என் கைகளில் இருந்த வளையல்கள் சரிந்தன. அவற்றை மீண்டும் எனக்குத் தந்தருளும்படி அவனிடம் கூறுங்கள்.

*(உகிர் — நகம், இரணியன் — திருமாலின் பக்தனாகிய பிரகலாதனின் தந்தை.)*

*சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த தண்முகில்காள்!*
*நிலங்கொண்டான் வேங்கடத்தே நிரந்தேறிப் பொழிவீர்காள்*
*உலங்குண்ட விளங்கனி போல் உள்மெலியப் புகுந்தென்னை*
*கலங்கொண்ட நாரணற்கு என் நடலைநோய் செப்புமினே (6)*

*எளிய உரை :* நீரை அள்ளிக்கொண்டு கிளர்ந்து எழுந்துள்ள மேகங்களே! 'மகாபலி' என்னும் அரசனிடம் இருந்து நிலைத்தைப் பெற்றவனாகிய திருமால் உள்ள வேங்கடமலையின் மேல் இருந்து மழை பொழிவீர்களாக. 'யானை உண்ட விளாம்பழம் போல' வெளித் தோற்றத்திற்கு நான் சரியாக இருந்தாலும், உள்ளே மெலிய வைத்துப் புகுந்து எனது அழைகைக் கொள்ளை கொண்டான் நாராயணன். அவனுக்கு நான்படும் துன்பத்தை எடுத்துச் சொல்லுங்கள்.

*சலம் —நீர்; உலங்கு — யானை; விளங்கனி — விளாம்பழம்.* யானையால் உண்ணப்பட்ட விளாம்பழம் யானையால் செரிக்கப்பட்டு, பழத்தினுள் உள்ள சத்துக்கள் நீங்கி மேல் ஓடு வெளியேறும் என்பார்கள். அதுபோல தலைவியின் மேலுடம்பு நன்றாக இருப்பது போல் தோன்றினாலும் உள்ளம் மெலிந்தது என்று உவமை வாயிலாகக் கூறப்பட்டுள்ளது.

*சங்கமா கடல்கடைந்தான் தண்முகில்காள்! வேங்கடத்துச்*
*செங்கண்மால் சேவடிக்கீழ் அடிவீழ்ச்சி விண்ணப்பம்*
*கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள்*
*தங்குமேல் என்னாவி தங்குமென்று உரையீரே. (7)*

*எளிய உரை :* சங்குகள் நிறைந்த கடலைக் கடைந்தவனாகிய திருமால் வாழுமிடம் வேங்கடமலை. அப்படிப்பட்ட மலையில் உள்ள குளிர்ந்த மேகங்களே! சிவந்த கண்களையுடைய திருமாலின் திருவடிகளில் விழுந்து நான் செய்யும் வேண்டுகோள் என்ன என்றால், எனது மார்பகங்களின்மேல் எழுதப்பட்டுள்ள செம்பஞ்சுக் குழம்பு அழிந்துவிடும்படி அணைத்துக்கொள்ள ஒருநாள் அவன் என்னுடன் தங்குவானானால் எனது உயிர்



தங்கும். இல்லாவிட்டால் இறந்துபடுவேன் என்பதை அவனிடம் கூறுவீர்களாக. 'குங்குமம்' என்பது இங்கு நெற்றியில் வைத்துக் கொள்ளும் குங்குமத்தைக் குறிக்கவில்லை. தலைமைகள் குறிப்பிடுவது அக்காலத்தில் பெண்கள் தங்கள் மார்பகம், தோள்பட்டை, கால்கள் முதலிய இடங்களில் பூசிக்கொள்ளும் செம்பஞ்சுக் குழம்பை. இது தற்காலத்தில் 'மருதாணி' என்று கூறப்படுகிறது.

*கார்காலத் தெழுகின்ற கார்முகில்காள்! வேங்கடத்துப்*
*போர்காலத் தெழுந்தருளிப் பொருதவனார் பேர்சொல்லி*
*நீர்காலத்து எருக்கினம் பழவிலைபோல் வீழ்வேனை*
*வார்காலத்து ஒருநாள்தம் வாசகம்தந் தருளாரே.* (8)

<u>எளிய உரை :</u> வேங்கடமலையில் எழுந்துள்ள கரிய மேகங்களே! பாரதப் போரிலே பாண்டவர்களுக்காகப் போர்க்களம் புகுந்தவன் கண்ணன். இரக்கக் குணம் நிரம்பப் பெற்றவன் அவன். 'நானோ' அவனது பிரிவால் மழைக்காலத்தில் எருக்கஞ்செடியில் இருந்து உதிரும் பழுப்பேறிய இலையைப்போல் பற்றுக்கோடு இல்லாமல் உள்ளேன். இனி ஒருநாள் எனக்காக நல்ல செய்தி சொல்வார். அந்த பதிலை பெற்று வாருங்கள்.(பழமை இலை — பழவிலை அதாவது பழுத்த இலை, வார்காலம் — கண்ணனின் பதில் கிடைக்கப் பெறாத நீண்டகாலம்).

| <u>உவமை</u> | <u>பொருள்</u> |
|---|---|
| நீர்காலம் | பிரிவுத்துன்பக் காலம் |
| எருக்கஞ்செடி | உலகப் பற்றுக்கள் |
| பழுப்பு இலை | தலைமகள் |

*மதயானை போலெழுந்த மாமுகில்காள்! வேங்கடத்தைப்*
*பதியாக வாழ்வீர்காள் பாம்பணையான் வார்த்தைஎன்னே*
*கதியென்றும் தானாவான் கருதாதுஓர் பெண்கொடியை*
*வதைசெய்தான் என்னும்சொல் வையகத்தார் மதியாரே.* (9)

<u>எளிய உரை :</u> மதம் பிடித்த யானைகள் எழுந்தால் எவ்வாறு இருக்குமோ அதுபோலத் திரண்டெழுந்த மேகங்களே! நீங்கள்

*வேங்கடமலையைச் சொந்த ஊராகக் கொண்டு வாழ்கிறீர்கள். பாம்பை படுக்கையாகக் கொண்ட திருமால் அன்று சொன்ன சொல் என்ன? என்னை (தலைமகளை) சந்திப்பதற்கு வருவதாகக் கூறிச் சென்றான். என்றைக்கும் எனக்குப் புகலிடம் (கதி) அவன்தான் என்பது அவனுக்குத் தெரியும். அப்படித் தெரிந்திருந்தும் அதை ஒரு பொருட்டாகச் சிந்தித்துப் பார்க்காமல் ஒரு பெண்கொடியை வதை செய்தான் என்னும் சொல் அவனுக்குப் போய்ச் சேரும். அப்போது உலகிலுள்ள மக்கள் அவனை மதிக்க மாட்டார்கள். (கதி – புகலிடம், பெண்கொடி – தலைமகள், வதை – துன்பம்.)*

*நாகத்தின் அணையானை நன்னுதலாள் நயந்துரைசெய்*
*மேகத்தை வேங்கடக்கோன் விடுதூதில் விண்ணப்பம்*
*போகத்தில் வழுவாத புதுவையர் கோதைதமிழ்*
*ஆகத்து வைத்துரைப்பார் அவர்அடியார் ஆகுவரே. (10)*

*<u>எளிய உரை</u> : நாகப்பாம்பைப் படுக்கையாகக் கொண்டவன் திருமால். நயம்பட உரைப்பதில் திறமைபெற்ற மேகத்தை திருவேங்கடவனிடம் தூதாக விட்டாள் ஆண்டாள். மகிழ்ச்சியில் குறையில்லாத 'புதுவை' என்னும் வில்லிபுத்தூர் நகரில் வாழும் பட்டர் பிரானுடைய மகளாகிய கோதை சொன்ன தமிழ்ப் பாடல்களை மனதில் நிறுத்தி, பிறருக்கும் எடுத்து உரைப்பவர்கள் திருமாலின் அடியார் ஆவார்கள். (விண்ணப்பம் – வேண்டுகோள், போகம் – மகிழ்ச்சி, ஆகம் – நெஞ்சம்.)*

*ஆண்டாள் திருவடிகளே சரணம்.*

*



*ஒன்பதாம் திருமொழி – சிந்துரச் செம்பொடி*

*(தலைமகள் தனது அன்புக்குரியவனை அடைந்திடத் திருமாலிருஞ்சோலை இறைவனை வழிபடுவதாக அமைந்துள்ளன இப்பாசுரங்கள்)*

*கலிநிலைத்துறை*

*கல்யாணி இராகம் – ரூபகதாளம்*

*சிந்துரச் செம்பொடிப்போல் திருமாலிருஞ் சோலையெங்கும்*
*இந்திர கோபங்களே எழுந்தும் பரந்திட் டனவால்*
*மந்தரம் நாட்டிஅன் று மதுரக்கொழுஞ் சாறுகொண்ட*
*சுந்தரத் தோளுடையான் சுழலையின் நின்றுஉய்த் தும்கொலோ. (1)*

*<u>எளிய உரை :</u> சிந்துரம் என்னும் சிவந்த பொடியைப் போல இந்திர கோபப் பூச்சிகள் திருமாலிருஞ் சோலை எங்கும் பரவிக் கிடக்கின்றன. பாற்கடலில் வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகவும், மந்தர மலையை மத்தாகவும் கொண்டு தேவர்கள் வாசுகியின் வால்பக்கமும், அசுரர்கள் அதன் தலைப்பக்கமும் நின்று பாற்கடலைக் கடைந்தார்கள். அதில் அமிழ்தம் பிறந்தது. மோகினி அவதாரம் எடுத்துக் கொண்டு அந்த அமிழ்தத்தை தேவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்த அழகான தோள்களையுடையவன் திருமால். அப்படிப்பட்ட திருமால் குடிகொண்டுள்ள இடம் திருமாலிருஞ்சோலை. அவன் எனது மனக்கவலையில் இருந்து என்னைக் காப்பாற்றுவானா? (இந்திரக் கோபங்கள் – சிவந்த நிறம் கொண்ட ஒருவகை பூச்சிகள், மந்தரம் – மந்தரமலை, மதுரக் கொழுஞ்சாறு – அமிழ்தம்).*

*போர்க்களிறு பொரும் மாலிருஞ்சோலையம் பூம்புறவில்*
*தார்க்கொடி முல்லைகளும் தவளநகை காட்டுகின்ற*
*கார்கொள் பிடாக்கள் நின்று கழறிச் சிரிக்கத் தரியேன்*
*ஆர்க்கு இடுகோ தோழி அவன்தார் செய்த பூசலையே. (2)*

*<u>எளிய உரை :</u> தோழியே! திருமாலிருஞ் சோலையில் உள்ள பூக்கள் நிறைந்த நீர் நிரம்பிய வயல்களில் போர்த்திறம் கொண்ட யானைகள் போரிடும். அங்கு கொத்துக் கொத்தாகப் பூத்துக்*

குலுங்கும் முல்லை மலர்கள் வெண்மையான சிரிப்பைக் காட்டுகின்றன. கரிய நிறம் கொண்ட பிடவ மலர்கள் மலர்ந்து சிரிப்பது எனது நிலையைக் கண்டு இடித்துரைப்பது போல் உள்ளது. திருமாலின் மாலை எனக்குத் தந்த வருத்தத்தை யாரிடம் சொல்லுவேன் தோழி ?

களிறு – ஆண்யானை, பிடி – பெண்யானை, புறவு – நீர் நிரம்பிய வயல், தார் – கொத்து, தவளம் – வெண்மை, பிடா – பிடவமலர்கள், கழறுதல் – சொல்லுதல், அதாவது திருமாலிடம் தலைமகள் தனது உள்ளத்தைப் பறிகொடுத்தது சரியல்ல என்று சொல்லிச் சிரிப்பது போல் உள்ளது வெண்மையான முல்லை மலர்கள் மலர்ந்திருக்கும் காட்சி.

*கருவிளை ஒண்மலர்காள்! காயா மலர்காள்! திருமால்*
*உருவொளி காட்டுகின்றீர் எனக்குஉய் வழக்கொன்று உரையீர்*
*திருவிளை யாடுதிண்தோள் திருமாலிருஞ் சோலைநம்பி*
*வரிவளை யில்புகுந்து வந்திபற்றும் வழக்குளது* (3)

<u>எளிய உரை :</u> கரிய ஒளி வீசும் மலர்களே! காயா மலர்களே! நீங்கள் இருவரும் திருமாலின் கரிய நிறத்தைக் காட்டிக் கொண்டிருக்கிறீர்கள். எனக்கு ஏற்பட்ட துன்பத்திலிருந்து தப்புவதற்கான வழக்கு ஒன்று உள்ளது. அதை அந்தத் திருமாலிடம் சென்று கூறுங்கள். திருமகள் விளையாடுகின்ற திரண்ட தோள்களையுடைய திருமாலிருஞ்சோலை நம்பியின் இல்லம் புகுந்து, கட்டாயப்படுத்தி அந்த வழக்கைத் தொடுக்க வேண்டும். (கருவிளை, காயா – கரிய நிறமுள்ள மலர்கள், இவை திருமாலின் நிறத்தை நினைவு படுத்துபவை. வந்தி – கட்டாயம்).

*பைம்பொழி ல்வாழ் குயில்காள்! மயில்காள்! ஒண்கருவிளைகாள்!*
*வம்பக் களங்கனிகாள்! வண்ணப்பூவை நறுமலர்காள்!*
*ஐம்பெரும் பாதகர்காள்! அணிமாலிருஞ் சோலைநின்ற*
*எம்பெருமா னுடைய நிறம் உங்களுக்கு என்செய்வதே?* (4)

<u>எளிய உரை :</u> பசுமையான திருமாலிருஞ்சோலையில் வாழ்கின்ற குயில்களே! ஒளிவீசும் மேனியை உடைய காகக் கூட்டங்களே! புதிதாகக் காய்த்துள்ள களாக்கனிகளே! அழகிய காயா மலர்களே!



நீங்கள் ஐந்து பேரும் கண்ணனின் கரிய நிறத்துடன் காணப்படுகிறீர்கள். உங்கள் நிறத்தைப் பார்க்கும் போது கண்ணனின் நினைவுதான் எனக்கு ஏற்படுகிறது. ஆகவே நீங்கள் ஐவரும் பஞ்சமா பாதகர்கள் ஆவீர்கள். திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியுள்ள என் தலைவனுடைய நிறம் உங்களை என்ன செய்தது? கூறுங்கள்.

துங்கமலர்ப் பொழில்சூழ் திருமாலிருஞ் சோலைநின்ற
செங்கண் கருமுகிலின் திருவுருப்போல் மலர்மேல்
தொங்கிய வண்டினங்காள்! தொகுபூஞ் சுனையில்
தங்குசெந் தாமரைகாள்! எனக்கு ஓர்சரண் சாற்றுமினே! (5)

<u>எளிய உரை :</u> தூய்மையான மலர்ச்சோலைகளால் சூழப்பட்டிருக்கும் திருமாலிருஞ்சோலையில் உள்ளான் திருமால். சிவந்த கண்களையும், கார் மேகங்களின் நிறத்தையும் போல மலர்களின் மேல் தொங்கிய வண்டினங்களே! பலவிதமான மலர்கள் பூத்துள்ள சுனையில் தங்கியுள்ள செந்தாமரைமலர்களே! உங்களின் நிறம் திருமாலின் நிறத்தை நினைவூட்டி, நான் அவன்மீது கொண்ட காதலைத் தூண்டிவிடுகிறது. எனது ஏக்கத்திலிருந்து நான் தப்பும் வழி எது என்று எனக்குக் கூறுவீர்களாக.

நாறு நறும்பொழில்மாலிருஞ் சோலை நம்பிக்குநான்
நூறு தடாவில் வெண்ணெய்வாய் நேர்ந்து பராவி வைத்தேன்
நூறு தடாநிறைந்த அக்கார அடிசில் சொன்னேன்
ஏறு திருவுடையான் இன்றுவந்திவை கொள்ளுங்கொலோ. (6)

<u>எளிய உரை :</u> நறுமணம் வீசுகின்ற சோலைகள் உள்ள திருமாலிருஞ் சோலையிலுள்ள நம்பிக்கு நூறு பானைகளின் வெண்ணெய்யை வைத்து வணங்கினேன். நூறு பானைகளில் அக்கார அடிசிலுக்குச் சொல்லிவைத்துள்ளேன். திருமகளை நெஞ்சில் தாங்கிய காளை மாட்டைப் போன்றவன் இன்று வந்து இவற்றை ஏற்றுக் கொள்வானா? (தடா – பானை, பராவுதல் – வணங்குதல், அக்கார அடிசில் – சர்க்கரை இட்டுச்

சமைக்கப்பட்ட பொங்கல் போன்ற ஒருவகை உணவு, ஏறு காளைமாடு).

இன்றுவந்து இத்தனையும் அமுதுசெய்திடப் பெறில்நான்
ஒன்று நூறாயிர மாக்கொடுத்துப் பின்னும் ஆளும் செய்வன்
தென்றல் மண்ம் கமழும் திருமாலிருஞ் சோலை தன்னுள்
நின்றபிரான் அடியேன் மனத்தே வந்து நேர்படிலே. (7)

எளிய உரை : தென்திசையிலிருந்து வீசும் தென்றல் காற்று நறுமணத்தை ஏந்திவரும். திருமாலிருஞ்சோலையில் நின்ற கோலத்திலுள்ள திருமால் எனது மனத்திலே வந்து நேர்பட்டு வெண்ணெய்யும் அக்கார அடிசிலும் உண்பாரானால் ஒரு பானை வெண்ணெய்யையும் அக்கார அடிசிலையும் ஒன்றுக்கு நூறு மடங்காகக் கொடுப்பேன். அத்துடன் நில்லாமல் மேலும் அவனுக்குப் பணி விடைகளைச் செய்வேன்.

காலை எழுந்திருந்து கரிய குருவிக் கணங்கள்
மாலின் வரவு சொல்லி மருள்பாடுதல் மெய்மை கொலோ
சோலை மலைப்பெருமான் துவராபதி எம்பெருமான்
ஆலினிலைப் பெருமான் அவன் வார்த்தை உரைக்கின்றதே. (8)

எளிய உரை : காலையில் எழுந்து கரிய நிறம் கொண்ட குருவிக் கூட்டங்கள் திருமாலின் வரவைச் சொல்லி, மயங்கிப் பாடுகின்றன. சோலைமலை என்னும் மாலிருஞ்சோலை துவாரகை ஆகிய இடங்களில் இருப்பவனும் ஆலமரத்தின் இலையில் குழந்தையாகத் தூங்கியவனுமாகிய எமது தலைவனின் பெயரைச் சொல்லுகின்றனவே அக்குருவிக் கூட்டம், இது உண்மையா?

கோங்க லரும் மாலிருஞ் சோலையில் கொன்றைகள் மேல்
தூங்குபொன் மாலைகளோடு உடனாய் நின்று தூங்குகின்றேன்
பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியும்
சார்ங்கவில் நாணொலியும் தலைப் பெய்வது எஞ்ஞான்று கொலோ. (9)

எளிய உரை : திருமாலிருஞ்சோலையில் உள்ள நெல்லிமரங்களில் பூக்கள் பூத்துக் குலுங்குகின்றன. அங்குள்ள கொன்றை மரக் கிளைகளின் தூங்கும் மலர்ச்சரங்களோடு நானும் ஒரு



மலர்ச்சரமாக வீணாய்க் கிடக்கிறேன். திருமாலின் மலர்போன்ற முகத்திலுள்ள வாயில் வைத்து ஊதப்படும் சங்கின் ஒலியையும், 'சாரங்கம்' என்னும் வில்லிலிருந்து எழும் ஓசையையும் நான் கேட்பது என்றோ?

கோங்கு – கோங்கிலவ மரம் அல்லது நெல்லிமரம், கொன்றை மலர்களைச் சிலர் சூடமாட்டார்கள். அதுபோல தலைமகளும் திருமாலினால் நுகரப்படாமல் வீணாய்க் கிடக்கிறாள் என்பது பொருள்.

*சந்தொடு காரகிலும் சுமந்து கரைகள் பொருது*
*வந்திழியும் சிலம்பாறுடைய மாலிருஞ் சோலை நின்ற*
*சுந்தரனை சுரும்பார் குழல்கோதை தொகுத்துரைத்த*
*செந்தமிழ் பத்தும் வல்லார் திருமாலடி சேர்வார்களே.* (10)

<u>எளிய உரை</u> : சந்தன மரத்தையும் கரிய அகில் மரத்தையும் உடைத்துச் சுமந்துகொண்டு வருகின்றது மாலிருஞ் சோலையிலுள்ள சிலம்பாறு. அப்படிப்பட்ட சோலையில் எழுந்துள்ள அழகிய திருமாலை வண்டைப் போன்ற கரிய நிறம் கொண்ட கூந்தலுடைய 'கோதை' என்னும் ஆண்டாள் தொகுத்துப் பாடிய இந்தப் பத்துப் பாடல்களையும் பாட வல்லவர்கள் திருமாலின் திருவடிகளைச் சேருவார்கள்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

*

பத்தாம் திருமொழி – கார்கோடல் பூக்காள்

(தலைமகனைப் பிரிந்த தலைமகள் பிரிவுத்துன்பம் தாங்காது பல இயற்கைப் பொருள்களிடமும், தோழியிடமும் வருந்திக் கூறுவது போல இப்பாசுரங்கள் அமைந்துள்ளன.)

கலிநிலைத்துறை

காம்போதி இராகம் – திரிபுடை தாளம்.

கார்கோடல் பூக்காள்! கார்க்கடல் கண்ணன் என்மேல்
போர்க்கோலம் செய்து போர விடுத்தவன் எங்குற்றான்?
ஆர்க்கோ இனிநாம் பூசலிடுவது அணிதுழாய்த்
தார்க்கோடும் நெஞ்சந் தன்னைப் படைக்கவல்லேன் அந்தோ. (1)

<u>எளிய உரை :</u> கரிய நிறமுள்ள காந்தள் மலர்களே! கருமையான கடலின் நிறமுள்ள கண்ணன் என்னை மனப் போராட்டம் செய்து ஏங்கும்படி விட்டு விட்டு இப்போது எங்கே சென்று விட்டான்? யாருக்காக நான் இனிமேல் வருந்தவேண்டும்? அவனது துளசி மாலைக்காக ஓடும் எனது நெஞ்சை எவ்வாறு கட்டுப்படுத்தி நிறுத்துவேன்? அந்தோ! அது இயலாது. (கோடல் பூக்கள் – காந்தள் மலர்கள், கார்கடல் – நீலநிறமான கடல், பூசல் – வருத்தம். துழாய்த்தார் – துளசிமாலை).

மேல்தோன்றிப் பூக்காள்! மேலுலகங்களின் மீதுபோய்
மேல்தோன்றும் சோதி வேதமுதல்வர் வலங்கையில்
மேல்தோன்றும் ஆழியின் வெஞ்சுடர்போலச் சுடாது எம்மை
மாற்றோலைப் பட்டவர் கூட்டத்துள் வைத்துக்
கொள்கிற்றிரே. (2)

<u>எளிய உரை :</u> உயரத்தில் பூத்துள்ள சிவந்த காந்தள் மலர்களே! மேலுலகங்கள் அனைத்துக்கும் மேலே உள்ள ஒளி வடிவமுள்ள தேவமுதல்வனுடைய வலக்கையின் மேல் காணப்படும் சக்கர ஆயுதத்தைப் போல எம்மைச் சுடவேண்டாம். மாற்றோலைப் பட்டவர்களின் கூட்டமாகிய திருமால் அடியவர்கள் அல்லாதவர்களின் கூட்டத்தில் எம்மைச் சேர்த்து விடாதீர்கள். தோன்றி – காந்தள்மலர்.



கோவை மணாட்டி! நீஉன் கொழுங்கனி கொண்டு எம்மை
ஆவி தொலைவியேல் வாயழகர் தம்மை அஞ்சுதும்
பாவியேன் தோன்றிப் பாம்பணையார்க்கும் தம் பாம்புபோல்
நாவு மிரண்டுள ஆயிற்று நாணிலி யேனுக்கே. (3)

<u>எளிய உரை :</u> கோவைக் கொடியாகிய மணப்பெண்ணே! உன் கொடியில் சிவந்த கோவைக்கனியைத் தாங்கி இருக்கிறாய். இந்தக் கனியின் சிவந்த நிறத்தைக் காட்டி எனது உயிரைப் போக்க வேண்டாம். கோவைகனியின் நிறம் எனது தலைவனின் வாயின் நிறத்தை நினைவுபடுத்துமோ என்று அஞ்சுகிறேன். பாம்பை படுக்கையாகக் கொண்ட திருமாலுக்கு அவரது பாம்புக்கு இருப்பது போலவே இரண்டு நாக்குகள் உள்ளன. அவரது சொல்லை நம்புகின்ற நாணம் இல்லாத பாவியாகப் பிறந்துள்ளேன் நான்.

முல்லைப் பிராட்டி! நீஉன் முறுவல்கள் கொண்டு எம்மை
அல்லல் விளைவியேல் ஆழி நங்காய்! உன்னடைக்கலம்
கொல்லை யரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார்
சொல்லும் பொய்யானால் நானும் பிறந்தமை பொய்யன்றே. (4)

<u>எளிய உரை :</u> முல்லைக் கொடியாகிய தலைவியே! உன் முல்லைமலர்கள் எனது தலைவனின் புன் முறுவலை நினைவுபடுத்தி வருத்தத்தை உண்டாக்குகின்றன. அவ்வாறு மலரச் செய்யாதே. கடல் சுழி என்னும் நங்கையே! நீதான் எனக்கு அடைக்கலம். கொலைக்கார அரக்கியாகிய சூர்ப்பனகையின் மூக்கை அறுத்த இராமனின் சொல்லே பொய்யாகி விடுமானால் நானும் பிறந்தது பொய்யல்லவா.

(ஆழி – கடல், சுழி – கணவனைப் பிரிந்த பெண்கள் மணலில் போடும் வட்டம், தொடங்கிய இடத்தில் வந்து இணைந்தால் மீண்டும் கணவனை அடைவார்கள் என்பதும், வட்டம் முடிவடையாவிட்டால் மீண்டும் கணவனை அடைய மாட்டார்கள் என்பதும் நம்பிக்கை. இந்தக் கூடற்சுழியை தலைமகள் ஆழி நங்கை என்று உருவகம் செய்கிறாள். கொலை அரக்கி என்பது கொல்லை அரக்கி என்று வந்தது எதுகைக்காக.

இப்பாடலில் இராமனாகக் குறிப்பிட்டது கண்ணனின் முந்தைய அவதாரம் என்பதால்.

பாடும் குயில்காள்! ஈது என்னபாடல் நல்வேங்கட
நாடர் நமக்கு ஒருவாழ்வு தந்தால் வந்து பாடுமின்
ஆடும் கருளக்கொடியார் வந்து அருள்செய்து
கூடு வராயிடில் கூவிநும் பாட்டுக்கள் கேட்டுமே. (5)

<u>எளிய உரை :</u> பாடும் குயில்களே! நீங்கள் பாடும் பாடல் இதுதானா? நல்ல வேங்கட மலை நாட்டைச் சேர்ந்த திருமால் நமக்கு ஒரு வாழ்வு தந்தால் வந்து பாடுங்கள். கருடக்கொடியை உடைய திருமால் இங்கு வந்து எமக்கு அருள் செய்து என்னுடன் கூடுவாரானால், உங்களை நானே கூவி அழைத்துப் பாடச் சொல்லிக் கேட்பேன். கருளக் கொடி – கருடக்கொடி.

கணமா மயில்காள் கண்ணபிரான்திருக் கோலம் போன்று
அணிமா நடம்பயின் றாடுகின் றீர்க்கு அடிவீழ் கின்றேன்
பணமா டரவனைப் பற்பல காலமும் பள்ளிகொள்
மணவாளர் நம்மை வைத்த பரிசிது காண்மினே. (6)

<u>எளிய உரை :</u> மயில் கூட்டங்களே! உங்களுடைய நிறம் கண்ணபிரானுடைய நிறத்தைப் போன்று உள்ளது. உங்கள் நிறம் எனக்கு அவனை நினைவு படுத்தி வருத்தம் அடையச்செய்கிறது. நீங்களோ, (கவலை ஏதுமில்லாமல்) அழகாக நடனம் ஆடுகிறீர்கள். உங்களுடைய திருவடிகளில் விழுந்து சரண் அடைகிறேன். படம் எடுத்து ஆடுகின்ற 'ஆதிசேஷன்' என்னும் பாம்பின் மேல் பல காலம் படுத்துள்ளார் திருமால். ஆனால் நம்மை எவ்வாறு வருத்தம் அடையச் செய்கிறார் பார்த்தீர்களா? பாம்புப் படுக்கையில் படுத்துத் தூங்குகின்ற திருமால் நம்மை இவ்வாறு பிரிவுத் துன்பத்தை நீட்டிக்கச் செய்கிறாரே என்பது பொருள். அடி – பாதங்கள், வைத்த பரிசு – வைத்த விதம்.

நடமாடித் தோகை விரிக்கின்ற மாமயில்காள்! உம்மை
நடமாட்டம் காணப் பாவியேன் நான்ஓர் முதலிலேன்
குடமாடு கூத்தன் கோவிந்தன் கோமிறை செய்து எம்மை
உடைமாடு கொண்டான் உங்கட்கு இனியொன்று போதுமே. (7)



<u>எளிய உரை :</u> நடனமாடும் போது தோகை விரிக்கின்ற பெரியமயில்களே! உங்கள் நடனத்தைக் காணக் கொடுத்து வைக்காத பாவி நான்தான். குடங்களைத் தலையில் தாங்கிக் குடக்கூத்து ஆடுகின்ற கண்ணன் கோவிந்தன் அனைவருக்கும் தலைவன். ஆனால் எனக்குச் சிறுமை செய்துவிட்டான். எனது உடைமைகளைக் கொள்ளை கொண்டு போய்விட்டான். இப்படி இருக்கும்போது நீங்கள் ஆடும் ஆட்டம் மேலும் எனக்குத் துன்பத்தைத் தருமே. சரியா நீங்கள் செய்வது? குடம் ஆடு கூத்து – குடக் கூத்து, கோவிந்தன் – ஆநிரைகளாகிய ஆடுமாடுகளைக் காப்பவன், மிறை – சிறுமை, உடைமாடு கொடு கொண்டான் – தலைவியின் உடைமைகளாகிய ஆடைகள், வளையல்கள், மாலை, மகிழ்ச்சி முதலியவற்றைக் கவர்ந்து கொண்டான்.

மழையே! மழையே! மண்புறம்பூசி உள்ளாய் நின்று
மெழுகு ஊற்றினாற்போல் ஊற்றுநல் வேங்டத்துள் நின்ற
அழகப்பிரானார் தம்மை என்னெஞ்சத் தகப்படத்
தழுவிநின்று என்னைத் ததைத்துக் கொண்டு ஊற்றவும்
வல்லையே. (8)

<u>எளிய உரை :</u> மழையே! மண்ணை மேலே பூசி, உள்ளே மெழுகை ஊற்றுவது போலே என்னை இறுக அணைத்து விட்டு என் உடலிலுள்ள உயிரைக் கவர்ந்து சென்றான் திருவேங்கட மலையில் நின்ற அழகப்பிரான் என்னும் திருமால். அவனை என் உடலோடும் உள்ளத்துடனும் அணைத்துக் கொள்ளச் செய்துவிட்டு நீ பொழிவாயாக.

கடலே! கடலே! உன்னைக் கடைந்து கலக்குறுத்து
உடலுள் புகுந்து நின்று ஊறல் அறுத்தவற்கு என்னையும்
உடலுள் புகுந்து ஊறலறுக்கின்ற மாயற்கு என்
நடலைகள் எல்லாம் அந்த நாகணைக்கே சென்றுரைத்தியே. (9)

<u>எளிய உரை :</u> கடலே! (பிறருடைய நன்மைக்காக) திருமால் உனது உடம்பாகிய ஆழமான கடலுக்குள் புகுந்து, உன்னைக் குடைந்து உறுத்தும்படிச் செய்தார். அப்படிப்பட்டவர் (அவரது பிரிவால் வாடும் பெண்ணாகிய) எனது உடம்புக்கு உள்ளேயும் நுழைந்து

எனது ஏக்கத்தைத் தீர்க்குமாறு அந்தப் பாம்பைப் படுக்கையாகக் கொண்ட திருமாலிடம் சென்று கூறு. ஊறல் — உறுத்தல், ஏக்கம், தினவு.

திருமால் கடலுக்குள் புகுந்து கலக்கிய செய்தி கூறப்படுகிறது. தேவர்களும் அசுரர்களும் பாற்கடலில் அமிழ்தம் எடுக்க விரும்பினார்கள். மந்தர மலையை மத்தாகவும், வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகவும் வைத்துக் கடைய முடிவு செய்தார்கள். அப்போது மந்தர மலையை பாற்கடலில் எதன்மேல் நிறுத்துவது என்று யோசித்தார்கள். திருமால் ஆமையாக வடிவம் கொண்டு தன் முதுகின் மேல் மந்தர மலையைத் தாங்கினார்.

*நல்ல என்தோழி! நாகணைமிசை நம்பரர்*
*செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென்*
*வில்லி புதுவை விட்டு சித்தர் தங்கள் தேவரை*
*வல்ல பரிசு வருவிப் பரேல் அதுகாண்டுமே.* (10)

<u>எளிய உரை :</u> எனது நல்ல தோழியே! நாகத்தின் மேல் பள்ளி கொண்டுள்ளவர் நமக்கும் மேலானவர். அனைத்துச் செல்வங்களையும் பெற்றவர், நம்மை விடப் பெரியவர். அப்படி இருக்கும்போது மானிடப் பிறவி எடுத்த நாம் என்ன செய்ய முடியும்? 'புதுவை' என்னும் வில்லிபுத்தூரில் வாழும் விட்டுணு சித்தர் திருமாலை எந்த வகையில் அழைப்பாரோ அந்த வகையில் அழைப்பார். அப்போது நாம் காண்போம். பரிசு — விதம்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

*



பதினொன்றாம் திருமொழி — தாமுகக்கும்

(தலைமகன் தான் வாக்குக் கொடுத்தபடி, குறிப்பிட்ட நேரத்தில் சொன்ன இடத்திற்கு நேரில்வராமல் பேச்சுத் தவறிவிட்டான். ஆகவே மனம் பொறுக்காத தலைமகள் தனது தாயார் முதலியவர்களை நோக்கி வருந்திக் கூறுவது போல அமைந்துள்ளன இப்பாடல்கள்.)

தரவு சொச்சக் கலிப்பா
சாவேரி இராகம் — திரிபுடை தாளம்.

தாமுகக்கும் தம்கையில் சங்கமே போலாவோ
யாமுகக்கும் எங்கையில் சங்கமும் ஏந்திழையீர்
தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர்
ஆ! முகத்தை நோக்காரால் அம்மனே! அம்மனே! (1)

<u>எளிய உரை :</u> பெற்றெடுத்த அம்மா, மற்றுமுள்ள பெண்களே! நெருப்பைச் சிந்துகின்ற பாம்புப் படுக்கையின் மேல் பள்ளி கொள்ளும் திருவரங்கப் பெருமாள் தமது கையில் 'பாஞ்ச சன்னியம்' என்னும் சங்கை ஏந்தியுள்ளார். நான் கையில் அணிந்துள்ள வளையல்கள் அவரது சங்கோடு சமம் ஆகாதா? அவர் எனது முகத்தைப் பார்க்க மாட்டாரா? சங்கம் — திருமாலின் கையிலுள்ள சங்கு, பெண்கள் தமது கையில் அணிந்துள்ள சங்கு வளையல், ஏந்திழையீர் — பெண்டிர்.

ஏழிலுடைய அம்மனைமீர் என்னரங்கத்து இன்னமுதர்
குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில்
எழு கமலப் பூவழகர் எம்மானார் என்னுடைய
கழல்வளையைத் தாமும் கழல்வளையே ஆக்கினரே. (2)

<u>எளிய உரை :</u> அழகான தாய்மார்களே! திருவரங்கத்திலுள்ள எனது இனியவர் (அமுதர்), தலைமுடி, வாய், கண்கள் ஆகியவற்றில் அழகுடையவர். எனக்கு உரிமையான அவரது (எம்மனார்) கொப்பூழில் இருந்து எழுந்து பூத்துள்ளது தாமரைப்பூ. இதுவும் அவருக்கு அழகு சேர்க்கிறது. இப்படிப்பட்ட





தலைவர் எனது கால்களில் உள்ள கொலுசுகளைக் கழன்று போகும்படி ஆக்கினார். குழல் — தலைமுடி, கழல்வளை — காலில் அணியும் கொலுசு, கழன்று விழுந்த கால் கொலுசு, 'கழல்' என்னும் சொல் வெவ்வேறு பொருளில் வந்துள்ளது.

பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்
அங்காதும் சோராமே ஆள்கின்ற எம்பெருமான்
செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்
எங்கோல் வளையால் இடர்தீர்வ ராகாதே. (3)

<u>எளிய உரை :</u> அலைவீசுகின்ற கடலால் சூழப்பட்ட நிலவுலகும், விண்ணுலகம் மற்றுமுள்ள யாதும் சோர்வு இல்லாமல் ஆட்சி செய்கின்ற செங்கோல் உடைய எமது தலைவர் கழன்றுவிட்ட எனது வளையல்களை மீண்டும் எனக்குக் கிடைக்கும்படி அருள்செய்யமாட்டாரா?

தலைவனைப் பிரிந்த பெண் தலைவனின் பிரிவுகாரணமாக உடல் இளைக்க அவளது வளையல் கழன்று விழுவதாக அகப்பொருள் நூல்களில் பேசப்படுகிறது. மேற்குறிப்பிடப்பட்ட பாடல்களில் கால் கொலுசு, கை வளையல் இவற்றைக் தலைவி பறிகொடுத்ததாகக் கூறப்பட்டுள்ளது.

மச்சணி மாட மதிளரங்கர் வாமனனார்
பச்சைப் பசுந்தேவர் தாம்பண்டு நீரேற்ற
பிச்சைக் குறையாகி என்னுடைய பெய்வளைமேல்
இச்சை உடையரேல் இத்தெருவே போதாரே. (4)

<u>எளிய உரை :</u> மேல் தளங்கள் அமைந்த மாட மாளிககளும், மதில்களும் நிறைந்த திருவரங்கத்திலே கோயில்கொண்டவர், பச்சைப் பசும் நிறம் உடைய இறைவர். அவர் முன்பொரு காலத்தில் மாவலி மன்னனிடம் தமது கால்களால் மூன்றடி மண் பிச்சையாகப் பெற, எள்ளும் நீரும் வார்க்கப் பெற்றார். அந்தப் பிச்சையில் மனநிறைவு ஏற்படாத காரணத்தால் எனது கை வளையல்களின் மேல் ஆவல் உண்டாகி இந்தத் தெருவின் வழியாக வரமாட்டாரா? பச்சைப் பசுந்தேவர் — திருமால், மச்சு — வீட்டின் மேல்தளம்.



பொல்லாக் குறள்உருவாய் பொற்கையில் நீரேற்று
எல்லா உலகும் அளந்து கொண்ட எம்பெருமான்
நல்லார்கள் வாழும் நளிர் அரங்க நாகணையான்
இல்லாதோம் கைப்பொருளும் எய்துவான் ஒத்துளதே. (5)

எளிய உரை : யாவரும் வியக்கும் குறுகிய வாமன அவதாரம் எடுத்துக் கொண்டு, மாவலி என்னும் மன்னன் ஊற்றிய தாரை நீரை பொன் கைகளில் ஏற்று, எல்லா உலகங்களையும் அளந்து கொண்டான் எமது தலைவன். நல்லவர்கள் வாழும் குளிர்ந்த திருவரங்கத்தில் பாம்பணையில் பள்ளிகொண்ட திருமால் செய்கின்ற செயல் எப்படி உள்ளது என்றால் ஏழைகளிடம் இருக்கும் அத்தியாவசியப் பொருள்களையும் ஒருவர் களவாடுவது போல் உள்ளது. நளிர் அரங்கம் – குளிர்ந்த திருவரங்கம். திருவரங்கம் காவிரி, கொள்ளிடம் இவற்றால் சூழப்பட்டுள்ள காரணத்தினால் நளிர் அரங்கம் எனப்பட்டது.

கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார் காவிரிநீர்
செய்ப்புரள ஓடும் திருவரங்கச் செல்வனார்
எப்பொருட்கும் நின்று ஆர்க்கும் எய்தாது நான்மறையின்
சொற்பொரு ளாய்நின்றார் என்மெய்ப்பொருளும்
கொண்டாரே. (6)

எளிய உரை : வயல்களைத் தொட்டுக் கொண்டு ஓடும் காவிரி நீரால் வளம் நிறைந்தது திருவரங்கம். அங்கு கோயில் கொண்டுள்ள செல்வர் எல்லாப் பொருள்களுக்கும் மூலப் பொருளாக நிற்பவர். யாராலும் எளிதில் அடைய முடியாதவர். நான்கு வேதங்களில் உள்ள சொற்களின் பொருளாக விளங்குபவர். அவர் ஏற்கனவே எனது கைப்பொருள்களைக் கொள்ளை கொண்டார். இப்போது எனது உடலையும் கொள்ளை கொண்டு விட்டார். இப்பாடலில் வேறொரு பொருளும் மறைந்து காணப்படுகிறது. கைப்பொருள் – தலைவியின் கைப்பொருள்களாகிய வளையல், கால் கொலுசு, மாலை, ஆடை முதலிய கண்களுக்குப் புலனாகும் பொருள்கள். மெய்பொருள் – வெற்றுக் கண்களுக்குக் காணப்படாத தலைவியின் உள்ளம்.

*உண்ணாது உறங்காது ஒலிகடலை ஊடறுத்து*
*பெண்ணாக்கை யாப்புண்டு தாமுற்ற பேதெல்லாம்*
*திண்ணார் மதிள்சூழ் திருவரங்கச் செல்வனார்*
*எண்ணாதே தம்முடைய நன்மைகளே எண்ணுவாரே. (7*

*__எளிய உரை :__ உறுதியான மதில்களால் சூழப்பட்ட திருவரங்கத்துச் செல்வராகிய திருமாலின் ஓர் அவதார இராமபிரான். அவர் உண்ணாமலும் உறங்காமலும் ஒலிக்கின் கடலில் 'சேது' என்னும் அணையைக்கட்டி, இலங்கைக்கு சென்றது சீதை என்னும் ஒரு பெண்ணைக் காப்பதற்காகத்தா ஆனால் நான் அவரையே நினைத்து வருந்துகிறேன். இதை எண்ணிப் பார்க்காமால் தனது நலன்களையே எண்ணுகிறார்.*

*பாசிதூர்த்துக் கிடந்த பார்மகட்குப் பண்டொருநாள்*
*மாசுடம்பில் நீர்வார மானமிலாப் பன்றியாம்*
*தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார்*
*பேசி இருப்பனகள் பேர்க்கவும் பேராவே. (8)*

*__எளிய உரை :__ ஒளிவீசுகின்ற உடம்மையுடையவர் திருவரங்க செல்வராகிய திருமால். பாசியால் மூடிக்கிடந்த நிலமகளை காப்பாற்றுவதற்காக, அழுக்குப் படிந்த உடம்பில் நீர் சொட்ட சொட்ட மானமில்லாத பன்றியின் வடிவும் எடுத்தார். அ இழிவாக நினைக்கவில்லை. அவர் என்னுடன் பழகிப் பேசி பேச்சுகளை எனது மனதிலிருந்து பெயர்த்தெடுக்க முயன்றாலு அது முடியவில்லை. பார்மகள் – நிலமகள், மானமில்லாப் பன் என்று குறிப்பிட்டது அதன் இழிசெயல்களை நோக்கி.*

*கண்ணாலம் கோடித்துக் கன்னி தன்னைக் கைப்பிடிப்பான்*
*திண்ணார்ந் திருந்த சிசுபாலன் தேசழித்து*
*அண்ணாந் திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்த*
*பெண்ணாளன் பேணும் ஊர் பேரும் அரங்கமே. (9)*

*__எளிய உரை :__ 'ருக்மிணி' என்னும் பெண்ணை திருமணம் செய் கொள்ள வேண்டும் என்று உறுதிசெய்து, பெருமிதத்துட இருந்த 'சிசுபாலன்' என்பவனின் வலிமையை அழித்து, அவ*



அண்ணாந்து கிடக்கும் படிச் (இறந்து கிடக்கும்படி) செய்துவிட்டு, ருக்மிணியைக் கைப்பிடித்தான் கண்ணன். அவனுடைய ஆளுகைக்கு உட்பட்ட ஊர் திருவரங்கம்.

செம்மை யுடைய திருவரங்கர் தாம்பணித்த
மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டு சித்தர் கேட்டிருப்பர்
தம்மை யுகப்பாரைத் தாமுகப்பார் என்னும்சொல்
தம்மிடையே பொய்யானால் சாதிப்பார் ஆர்இனியே? (10)

<u>எளிய உரை :</u> சிறந்த குணங்கள் நிரம்பப் பெற்ற திருவரங்கர் என்ன ஆணியிடுகிறாரோ அதை விட்டுசித்தர் கேட்டிருப்பார். திருவரங்கர் தம்மை விரும்புகின்றவர்களை தாமும் விரும்புவார் என்னும் சொல் திருவரங்கரிடமே பொய்யாகி விட்டால், சொன்ன சொல்லைக் காப்பாற்றக் கூடியவர்கள் இனி யார் இருக்கப் போகிறார்கள்?

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

*

பன்னிரண்டாம் திருமொழி – மற்றிருந்தீர்கட்கு

*(தலைமகள் தலைமகனின் இருப்பிடத்திற்குத் தன்னைக் கொண்டுபோய் விடும்படி உற்றார் உறவினர்களை வேண்டுவது போல இப்பாடல்கள் அமைந்துள்ளன.)*

எண்சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்
நாதநாமக் கிரியை இராகம் – ஆதிதாளம்.

*மற்றிருந் தீர்கட்கு அறிய லாகா*
*மாதவ னென்பதோர் அன்பு தன்னை*
*உற்றிருந் தேனுக்கு உரைப்ப தெல்லாம்*
*ஊமைய ரோடு செவிடர் வார்த்தை*
*பெற்றிருந் தாரை ஒழிய வேபோய்ப்*
*பேர்த்தொரு தாயில் வளர்ந்த நம்பி*
*மற்பொருந் தாமற் களமடைந்த*
*மதுரைப் புறத்து என்னை உய்த்திடுமின்.* (1)

<u>எளிய உரை :</u> *உற்றார் உறவினர்களே! 'மாதவன்' என்னும் அன்பை, என்னைச் சுற்றியுள்ள உங்களால் அறிய முடியாது. நான் அவனது பிரிவால் படும் துன்பத்தைக்கண்டு நீங்கள் எனக்குப் பலவிதமாய் ஆறுதல் கூறுகிறீர்கள். அந்த ஆறுதல் சொற்கள் ஊமையர், செவிடர் இவர்களின் காதில் கூறிய சொற்களைப் போல எந்தப் பயனும் இல்லாமல் போயிற்று. தன்னைப் பெற்றெடுத்த தேவகி, வசுதேவன் ஆகிய பெற்றோரை விட்டு விட்டு வேறொரு தாயாகிய அசோதையின் வீட்டில் வளர்ந்தவன் கண்ணன். (தாய்மாமனாகிய கம்சனின் அழைப்பை ஏற்று) மற்போர் செய்யக் கூடிய களத்தை அடைந்த கண்ணனின் வடமதுரைக்கு என்னை அழைத்துச் சென்று விடுங்கள். (தாய் + இல் – தாயில் – தாய்வீடு)*

*நாணி இனியோர் கருமமில்லை*
*நாலய லாரும் அறிந்தொழிந்தார்*
*பாணியாத என்னை மருந்து செய்து*
*பண்டு பண்டாக்க உறுதிராகில்*



*மாணி யுருவாய் உலகளிந்த*
*மாயனைக் காணில் தலைமறியும்*
*ஆணையால் நீர்என்னைக் காக்கவேண்டில்*
*ஆய்பாடிக் கேஎன்னை உய்த்திருமின்.* (2)

<u>எளிய உரை :</u> நான் கண்ணனிடம் கொண்ட காதல் நோயை இனி மூடி மறைத்து ஆகப்போவது ஒன்றுமில்லை. காரணம், அயல் மக்கள் நான்கு பேருக்கு (ஊரிலுள்ள அனைவருக்கும்) இது தெரிந்து விட்டது. தாமதம் செய்யாமல் எனது நோயினைப் போக்க மருந்து ஏதும் எனக்குத் தந்து பழையபடி என்னை ஆக்க நீங்கள் விரும்புவீர்களானால், வாமனனாக உருவெடுத்து உலகை அளந்த மாயனை நான் காண ஏற்பாடு செய்யுங்கள். அப்போது எனக்கு வந்த அந்த நோய் அடங்கும். ஆகவே கண்ணனின் ஆயர்பாடிக்கே என்னை அழைத்துச் செல்லுங்கள்.

*தந்தையும் தாயும் உற்றாரும் நிற்கத்*
*தனிவழி போயினாள் என்னும் சொல்லு*
*வந்த பின்னைப் பழிகாப் பரிது*
*மாயவன் வந்து உருக்காட்டு கின்றான்*
*கொந்தள மாக்கிப் பரக்கழித்துக்*
*குறும்பு செய்வானோர் மகனைப் பெற்ற*
*நந்த கோபாலன் கடைத்தலைக்கே*
*நள்ளிருட்கண் என்னை உய்த்திடுமின்.* (3)

<u>எளிய உரை :</u> "தந்தையும் தாயும் உற்றாரும் இருக்கும்போது இவள் மட்டும் மனம் போன போக்கில் தனியாகப் போய்விட்டாள்" என்னும் சொல் வந்து சேரும். அந்த சொல் வந்த பிறகு காப்பது மிகவும் கடினம். மாதவன் என் முன்பு வந்து தனது உருவத்தைக்காட்டுகின்றான். ஆயர்பாடியில் வளர்ந்து பலவிதமான குறும்புகளைச் செய்து குழப்பத்தை உண்டாக்கிய மகனைப் பெற்ற நந்த கோபனுடைய வாசலுக்கு விடியற்காலம் என்னை அழைத்துச் செல்லுங்கள். (சொல் என்பது பேச்சு மொழியில் 'சொல்லு' என்று வந்துள்ளது. கொந்தளம் – குழப்பம், கடைத்தலை – வாசல், நள்ளிருள் – விடியலுக்குமுன்பு).





*அங்கைத் தலத்திடை ஆழி கொண்டா*
*னவன்முகத் தன்றி விழியே னென்று*
*செங்கச்சுக் கொண்டு கண்ணாடை ஆர்த்துச்*
*சிறுமானிட வரைக்காணில் நாணும்*
*கொங்கைத் தலமிவை நோக்கிக் காணீர்*
*கோவிந்தனுக் கல்லால் வாயில் போகா*
*இங்குத்தை வாழ்வை யொழிய வேபோய்*
*யமுனைக் கரைக்கு என்னை உய்த்திடுமின்.* (4)

*எளிய உரை :* உள்ளங்கையில் 'சாரங்கம்' என்னும் சக்கர ஆயுதத்தை ஏந்தியுள்ள திருமாலின் முகத்தைத் தவிர வேறு ஒருவர் முகத்திலும் விழிக்கமாட்டேன் என்று செம்மையான ஆடையைக் கொண்டு கண்களைக் கட்டிக் கொள்வாள். அற்ப மனிதர்கள் வந்தால் வெட்கம் அடையும் மார்பகங்களைப் பாருங்கள். இவை கோவிந்தனைத் தவிர வேறு மானிடர்களுக்கு உரிமையாக மாட்டா. நான் இங்கிருப்பதை விட்டு, என்னை யமுனைக் கரைக்கு அழைத்துச் செல்லுங்கள். அங்கை — உள்ளங்கை, கொங்கைத்தலம் — மார்பகங்கள்.

*ஆர்க்கும் என்நோயிது அறியலா காது*
*அம்மனையீர்! துழதிப் படாதே*
*கார்க்கடல் வண்ணன் என்பான் ஒருவன்*
*கைகண்ட யோகம் தடவத் தீரும்*
*நீர்க்கரை நின்ற கடம்பை ஏறிக்*
*காளியன் உச்சியில் நட்டம் பாய்ந்து*
*போர்க்களமாக நிருத்தம் செய்த*
*பொய்க்கைக் கரைக்கு என்னை உய்த்திடுமின்.* (5)

*எளிய உரை :* அன்னையரே! மற்றுமுள்ள பெண்களே! எனது நோய் இன்னது என்று யாராலும் அறிய முடியாது. நீல நிறமுள்ள கடல் போன்ற நிறம் கொண்ட கண்ணன் என்னும் ஒருவன் வந்து தனது கைகளால் என்னைத் தடவ உடனே எனது காதல் நோய் தீர்ந்து விடும். பொய்கையின் கரையிலே இருக்கும் கடம்பமரத்தில் ஏறி காளியன் என்னும் பாம்பின் தலையில் நடனம் ஆடியவன்.



*அப்படிப்பட்ட பொய்கைக் கரைக்கு என்னை காலம் தாழ்த்தாமல் அழைத்துச் செல்லுங்கள்.*

*கார்த்தன் முகிலும் கருவிளையும்*
*காயா மலரும் கமலப் பூவும்*
*ஈர்த்திடு கின்றன என்னை வந்திட்டு*
*இருடீகேசன் பக்கல் போகே என்று*
*வேர்த்துப் பசித்து வயிரசைத்து*
*வேண்டடிசில் உண்ணும் போது ஈதென்று*
*பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்ளும்*
*பத்தவி லோசனத்து உய்த்திடுமின்.* *(6)*

*<u>எளிய உரை :</u> கார்காலத்தின் குளிர்ந்த மேகமும், கருவிளை என்னும் மலரும், காயாமலரும், கமல மலரும் (தாமரை) என்முன் வந்து கண்ணனிடம் போ என்று வற்புறுத்திக் கூறுகின்றன. (ஆயர்பாடியில் வாழும் ஆநிரை மேய்ப்பவர்கள்) உழைத்துக் களைத்து அதனால் வியர்வை சிந்தி, பசியோடு வயிறு தளர்ந்து உணவு உண்பதற்கான நேரம் இது என்று பொழுதை எதிர்நோக்கி, விருந்தினர்களின் வரவைப் பார்த்திருக்கும் 'பத்த விலோசனம்' என்னுமிடத்திற்கு என்னை அழைத்துச் செல்லுங்கள்.*

*(இருள் + தீர் கேசன் – இருடீகேசன் தன்னை அடைக்கலமாக அடைந்தவர்களின் துன்பத்தைப் போக்குபவன், 'கேசி' என்னும் அரக்கனைக் கண்ணன் கொன்றதால் அவனுக்குக் கேசன் என்றும் கேசவன் என்றும் பெயர்கள் ஏற்பட்டன. போது – பொழுது, நெடுநோக்குக் கொள்ளுதல் – தொலைதூரத்திற்குப் பார்வையைச் செலுத்துதல், அதாவது உணவு உண்ணும் நேரத்தில் விருந்தினர் எவராவது வருவார்களா என்று பார்த்திருத்தல். பத்த விலோசனம் – கண்ணன் கால்பட்ட இடங்களில் ஒன்று.*

*வண்ணந் திரியும் மனங்குழைவும்*
*மானமி லாமையும் வாய்வெளுப்பும்*
*உண்ண லுறாமையும் உள்மெலிவும்*
*ஓதநீர் வண்ணன் என்பான் ஒருவன்*

தண்ணந் துழாய்என்னும் மாலை கொண்டு
சூட்டத் தணியும் பிலம்பன் தன்னை
பண்ணழி யப்பல தேவன் வென்ற
பாண்டி வடத்து என்னை உய்த்திடுமின். (7)

ஏளிய உரை : என்னைச் சூழ்ந்திருப்பவர்களே! எனது உடலின் நிற வேறுபாடும், மனச்சோர்வும், மானமில்லாமையும், வாய் இதழ்களின் வெளுப்பும், உணவு உண்ணாமையும், உள்ளத்தில் ஏற்படும் ஏமாற்றமும் எப்போது நீங்கி நான் பழைய நிலையை அடைவேன் என்றால், கடல் வண்ணத்தையுடைய ஒருவன் குளிர்ந்த துளசிமாலையைக் கொண்டு வந்து எனக்குச் சூட்டும் போதுதான். அது உங்களால் முடியாத செயல் என்றால் கண்ணனின் அண்ணனாகிய பலராமன் ஒரு சமயம் 'பிலம்பாசுரனை' அவனது வீரம் கெடும்படி அழிந்த இடமாகிய 'பாண்டீரம்' என்னும் ஆலமரத்தின் அருகில் கொண்டுபோய் விட்டு விடுங்கள், அப்போது எனது துன்பங்கள் யாவும் நீங்கிவிடும்.

கற்றினம் மேய்க்கிலும் மேய்க்கப் பெற்றான்
காடுவாழ் சாதியும் ஆகப் பெற்றான்
பற்றி இரவிடை யாப்பும் உண்டான்
பாவிகாள்! உங்களுக்கு ஏச்சுக் கொலோ
கற்றன பேசி வசையு ணாதே
காலிகள் உய்ய மழைத டுத்து
கொற்றக் குடையாக ஏந்தி நின்ற
கோவர்த்த னத்து என்னை உய்த்திடுமின். (8)

ஏளிய உரை : கண்ணன் கன்றினங்களை மேய்க்கவும் மேய்த்தான். இடையர் சாதியில் ஒருவனாகவும் ஆனான். உரலோடு சேர்த்து அவனது வளர்ப்புத்தாயாகிய அசோதையால் கட்டப்பட்டான். பாவிகளே! கண்ணனின் இந்தச் செயல்களை இழிவாகக் கருதுகிறீர்களே நீங்கள். கற்ற கல்வியை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு பேசி மேலும் தவறுகளைச் செய்ய வேண்டாம். ஆநிரைகளாகிய ஆடுமாடுகளை மழையிலிருந்து



காப்பாற்றுவதற்காகக் கோவர்த்தன மலையைக் கொற்றக் குடைபோல் ஏந்தி நின்றான் கண்ணன். அந்த கோவர்த்தன மலைக்கு அருகில் என்னைக் கொண்டு செல்லுங்கள். கன்று + இனம் – கற்றினம். காடுவாழ் சாதி – காடும் காடு சார்ந்த நிலமாகிய முல்லை நிலத்தில் வாழும் மக்கள். குறிஞ்சி நிலத்திற்கும், மருத நிலத்திற்கும் இடைப்பட்ட நிலம் முல்லை. அங்கு வாழும் மக்கள் 'இடையர்' என்று அழைக்கப்பட்டனர். ஆகவே இடையர் என்பது ஒரு சாதி ஆகாது.

ஆயர்பாடியைச் சேர்ந்த மக்கள் ஒரு சமயம் கண்ணனுக்குப் பொங்கலிட்டனர். இதைக்கண்டு பொறாமை கொண்டான் தேவர்களின் தலைவனாகிய இந்திரன். மேகங்களை அழைத்து, ஆயர்பாடிக்குச் சென்று கல்மழை பொழியுமாறு ஆணையிட்டான். மேகங்கள் அவ்வாறே செய்தன. ஆயர்பாடி மக்கள் கண்ணனிடம் வேண்டிக்கொண்டனர். கண்ணன் 'கோவர்த்தனமலை' யைத் தனது சுண்டு விரலால் குடைபோல் தூக்கிப் பிடித்தான். பாதிக்கப்பட்ட மக்களும் ஆநிரைகளும் அதில் அடைக்கலம் புகுந்தனர். இறுதியில் இந்திரன் தனது ஆனவம் நீங்கினான்.

கூட்டி யிலிருந்து கிளிஎப் போதும்
கோவிந்தா! கோவிந்தா! என்று அழைக்கும்
ஊட்டக் கொடாது செறுப்பன் ஆகில்
'உலக ளந்தான்' என்றுயரக் கூவும்
நாட்டில் தலைப்பழி எய்தி உங்கள்
நன்மை இழந்து தலையி டாதே
சூட்டுயர் மாடங்கள் உயர்ந்து தோன்றும்
துவரா பதிக்கு என்னை உய்த்திடுமின். (9)

<u>எளிய உரை :</u> என்னைச் சுற்றி இருப்பவர்களே! தனது கூட்டிலிருந்து கிளி எப்போதும் 'கோவிந்தா' 'கோவிந்தா' என்று அழைக்கும். அதற்குரிய உணவை ஊட்டாமல் கோபம் கொண்டால் 'உலகளந்தான்' என்று பலமாகக் கூவும். எந்நேரம் கண்ணன் மேல் நான் நினைவாக இருப்பதால் எனக்குக்

*கிடைப்பது ஊரில் பெரும் அவமானமே ஆகும். உங்களாலும் எனக்கு எந்த வகையிலும் உதவி செய்ய முடியாது. ஆகவே உயர்ந்த மாளிகைகள் சூழ்ந்த, கண்ணனின் இருப்பிடமாகிய 'துவாரகை' என்னும் இடத்திற்கு என்னை அழைத்துச் சென்று விட்டு விடுங்கள்.*

*கோவிந்தன் – ஆநிரைகளைக் காப்பவன். உலகளந்தான் – மூன்று உலகங்களையும், 'வாமனன்' என்னும் அவதாரம் எடுத்து அளந்தவன். இச்செய்தி முந்தைய இயல்களில் பல இடங்களில் கூறப்பட்டுள்ளது. துவராபதி – துவாரகை, இன்றைய குஜராத் மாநிலத்திலுள்ள மேற்குக் கடற்கரைப்பட்டினம்.*

*மன்னு மதுரை தொடக்க மாக*
*வண் துவ ராபதி தன்னளவும்*
*தன்னைத் தமர் உய்த்துப் பெய்ய் வேண்டித்*
*தாழ்குழலாள் துணிந்த துணிவை*
*பொன்னியல் மாடம் பொலிந்து தோன்றும்*
*புதுவையர் கோன்விட்டு சித்தன் கோதை*
*இன்னிசை யில்சொன்ன செஞ்சொல் மாலை*
*ஏத்தவல் லார்க்குஇடம் வைகுந்தமே.*

*<u>எளிய உரை :</u> நிலைபெற்ற வடமதுரை முதல் வளமையான துவாரகை (துவாரகாபதி) என்னும் தலம் வரையும் தன்னைக் கொண்டு போய் விடும்படித் தங்கள் உறவினர்களிடம் வேண்டி ஆண்டாளினால் துணிந்து பாடப்பட்டன. இப்பாடல்கள் பொன் மாளிகைகள் காணப்படும் புதுவை நகரின் தலைவராகிய விட்டு சித்தன் என்பவரின் கோதை பாடினாள். இச்சொல் மாலைகளைப்பாடி வணங்குவர்களின் இருப்பிடமே வைகுந்தம் ஆகும். மன்னும் – நிலைபெறும், தாழ்குழல் – நீண்ட தலைமுடியை உடைய ஆண்டாள்.*

*ஆண்டாள் திருவடிகளே சரணம்.*

✻



*பதிமூன்றாம் திருமொழி – கண்ணன் என்னும் கருந்தெய்வம்*

*(கண்ணன் அணிந்திருந்த ஆடை அணிகலன்களைத் தலைமகள் தனக்கு அணிவித்துத் தனது கவலையைப் போக்குமாறு உற்றார் உறவினர்களிடம் வேண்டுவது போல அமைந்துள்ளது இப்பாடல்கள்.)*

*அறுசீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*
*பைரவி இராகம் – ஆதிதாளம்.*

*கண்ணன் என்னும் கருந்தெய்வம்*
*காட்சிப் பழகிக் கிடப்பேனை*
*புண்ணில் புளிப்பெய்தால் போலப்*
*புறம்நின்று அழகு பேசாதே*
*பெண்ணின் வருத்தம் அறியாத*
*பெருமான் அரையில் பீதக*
*வண்ண ஆடை கொண்டென்னை*
*வாட்டம் தணிய வீசீரே!* (1)

<u>எளிய உரை :</u> சுற்றியுள்ள பெண்களே! கண்ணன் என்னும் கரிய தெய்வத்தையே எப்பொழுதும் மனதில் காட்சிப் பொருளாக நினைத்துக்கொண்டு இருக்கும் என்னைப் பற்றி அப்பால் போய் இழித்துப் பேசுகிறீர்கள். உங்கள் செயல் எப்படியுள்ளது என்றால் ஒருவரின் புண்ணில் புளியின் கரைசலை ஊற்றினால் எப்படியிருக்குமோ அதுபோல் உள்ளது. பெண்ணாகிய எனது துன்பங்களை அறியாத பெருமாளுடைய இடுப்பில் அணிந்துள்ள அழகான 'பீதாம்பரம்' என்னும் ஆடையைக் கொண்டு வந்து எனது கவலை நிங்கும்படி என்மேல் வீசுங்கள்.

அரை – இடுப்பு, உடலின் பாதி அளவு. ஆகவே அரை எனப்பட்டது. உவமை விளக்கம் : தலைமகளின் நொந்து போன மனத்திற்குப் புண்ணும், பெண்களின் விமரிசனப் பேச்சுகளுக்குப் புளிக்கரைசலும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

*பாலா லிலையில் துயில் கொண்ட*
*பரமன் வலைபட் டிருந்தேனை*
*வேலால் துன்பம் பெய்தாற்போல்*
*வேண்டிற் றெல்லாம் பேசாதே*
*கோலால் நிரை மேய்த்து ஆயனாய்க்*
*குடந்தைக் கிடந்து குடமாடி*
*நீலார் தண்ணந் துழாய்கொண்டுஎன்*
*நெறிமென் குழல்மேல் சூட்டீரே.* (2)

*<u>எளிய உரை :</u> பெண்களே! ஆலமரத்தின் இளந்தளிரான இலையில் துயில் கொண்ட பரமனாகிய கண்ணனின் நினைவு என்னும் வலையில் சிக்கிக் கிடந்த என்னை, வேலினால் துளையிட்டால் உடம்பு எவ்வாறு வலிக்குமோ அதுபோல விரும்பிய சொற்களால் என்னை இழிவாகப் பேசாதீர்கள். கண்ணன் ஆநிரைகளைத் தடி கொண்டு மேய்த்து ஓர் இடையன் போல வாழ்ந்தான். குடந்தையிலே (கும்பகோணம்) குடக்கூத்து ஆடினான். அப்படிப்பட்ட கண்ணனின் குளிர்ந்த துழாய் மாலையைக் கொண்டு வந்து எனது கூந்தலில் சூட்டிவிடுவீர்களாக. (வேலால் துன்னம் பெய்தாற்போல — அம்பினால் உடலைத் துளையிட்டது போல — இது உவமை.)*

*கஞ்சைக் காய்ந்த கருவில்லி*
*கடைக்கண் என்னும் சிறைக்கோலால்*
*நெஞ்சூடு உருவ ஏவுண்டு*
*நிலையும் தளர்ந்து நைவேனை*
*அஞ்சேல் என்னான் அவனொருவன்*
*அவன்மார் பணிந்த வனமாலை*
*வஞ்சி யாதே தருமாகில்*
*மார்பில் கொணர்ந்து புரட்டீரே.* (3)

*<u>எளிய உரை :</u> கம்சனைக் கொன்ற கரிய நிறமுள்ளவன் கண்ணன். அவனது கடைக்கண் பார்வை என்னும் அம்பு எனது நெஞ்சத்தை ஊடுருவியது. நான் அதன் காரணமாக நிலை தளர்ந்து வேதனைப் படுகிறேன். அந்தக் கண்ணனோ 'அஞ்ச வேண்டாம்' என்று*



*கூறமாட்டேன் என்கிறான். அவனுடைய மார்பில் அணிந்துள்ள வனமாலையை வஞ்சனை இல்லாமல் தருவானானால் அதைக் கொண்டு வந்து எனது மார்பில் வெப்பம் நீங்கும்படிப் புரட்டித் தடவிவிடுங்கள். (கஞ்சை – கம்சன், கருவில்லி – கண்ணன். கடைக்கண் என்னும் சிறைக்கோல் – கடைக்கண் பார்வை என்னும் அம்பு, நைதல் – துன்பம் அடைதல்.)*

*ஆரே உலகத்து ஆற்றுவார்*
*ஆயர்பாடிக் கவர்ந்து உண்ணும்*
*காரே ருழக்க உழக்குண்டு*
*தளர்ந்தும் முறிந்தும் கிடப்பேனை*
*ஆரா வமுத மனையான்தன்*
*அமுத வாயில் ஊறிய*
*நீர்தான் கொணர்ந்து புலராமே*
*பருகி இளைப்பை நீக்கீரே.* (4)

*<u>எளிய உரை :</u> என்னைச் சுற்றி சூழ்ந்திருக்கக் கூடியவர்களே! ஆயர்பாடியில் வெண்ணெய்யைக் கவர்ந்து உண்ணக்கூடிய கரிய நிறமுள்ள காளையாகிய கண்ணன் என்னைக் கலக்கம் அடையச் செய்ததனால் நான் தளர்ந்தும் மனம் ஒடிந்தும் கிடக்கிறேன். (நான் மீண்டும் எனது பழைய நிலைமையை அடைய வேண்டுமானால் ஒரே வழி உண்டு) ஆராவமுதம் போன்றவனுடைய கண்ணனின் வாயில் ஊறும் நீரைக் கொண்டு வந்து நான் குடிக்கும்படிச் செய்து எனது வாய் இதழ்கள் (காமத் தீயினால் )காய்ந்து போகாமல் இருக்கச் செய்யுங்கள். எனது இளைப்பைப் போக்குங்கள். கண்ணனின் பிரிவுத் துன்பத்தை நான் ஆற்றி இருப்பது போல் வேறு யாரால் ஆற்ற முடியும்?*

*'ஆயர்பாடிக் கவர்ந்துண்ணும் காரேறு' என்பதற்கு இருவிதமாகப் பொருள் கூறலாம்படி அமைந்துள்ளது. ஒன்று, ஆயர்பாடி என்பதை இட ஆகுபெயராகக் கொண்டு ஆயர்பாடியில் உள்ள மக்கள் கவர்ந்து உண்ணுகின்ற கரிய காளையாகிய கண்ணனின் அழகு என்பது. மற்றொருபொருள் ஆயர்பாடியிலுள்ள இல்லங்களில் கிடைக்கும் பால், தயிர், வெண்ணெய் முதலிய பொருள்களைத் திருடித் திண்ணும் கரிய காளையாகிய கண்ணன் என்பது.*





*அழிலும் தொழினும் உருக்காட்டான்*
*அஞ்சேல் என்னான் அவனொருவன்*
*தழுவி முழுவிப் புகுந்தென்னைச்*
*சுற்றிச் சுழன்று போகானால்*
*தழையின் பொழில்வாய் நிரைப்பின்னே*
*நெடுமா லூதி வருகின்ற*
*குழலின் துளைவாய் நீர்கொண்டு*
*குளிர முகத்துத் தடவீரே.* (5)

<u>எளிய உரை :</u> அழுதாலும் தொழுதாலும் கண்ணன் தனது உருவத்தை எனக்கு காட்டமாட்டான். 'அஞ்ச வேண்டாம்' என்று ஆறுதல் கூறவும் மாட்டான். அவன் என்னை இறுக அணைத்து, உடலில் ஊடுறுவிச் சூழ்ந்துள்ளான். என்னை விட்டுப் போக மாட்டான். தழைகள் நிறைந்த சோலையில் ஆநிரைகளின் பின்னால் 'நெடுமால்' என்று அழைக்கப்படும் கண்ணன் புல்லாஞ்குழலை ஊதிக் கொண்டு வருகிறான். அந்தப் புல்லாங்குழலின் வழியாக வெளியேறி வழிகின்ற நீரைக் கொண்டு வாருங்கள். வெப்பத்தால் சூடேறியுள்ள எனது முகத்தில் அதைத் தடவுங்கள். புல்லாங்குழல் ஊதும் போது அதன் துளைகளின் வழியாக ஊதுபவர்களின் எச்சில் வழியும். அந்த எச்சில் நீரை எடுத்து வந்து வெப்பத்தால் வாடியுள்ள தலைவியின் முகத்தில் தடவுமாறு வேண்டுகிறாள் தலைமகள். (முழுசிப் புகுந்து – ஊடுருவிப் புகுந்து).

*நடையொன் றில்லா உலகத்து*
*நந்த கோபன் மகனென்னும்*
*கொடிய கடிய திருமாலால்*
*குளப்புக் கூறு கொளப்பட்டு*
*புடையும் பெயற கில்லேன்நான்*
*போட்கன் மிதித்த வடிப்பாட்டில்*
*பொடித்தான் கொணர்ந்து பூசீர்கள்*
*போகா உயிர்என் உடம்பையே.* (6)



<u>எளிய உரை :</u> இப்படித்தான் வாழ வேண்டும் என்னும் விதிமுறைகள் இல்லாத உலகம் இது. இப்படிப்பட்ட உலகத்தில் நந்தகோபனின் மகனான திருமாலினால் நான் மிகவும் மனம் தடுமாறியுள்ளேன். காரணம் அவன் கொடுமையும், கடுமையும் நிறைந்தவனாக இருக்கிறான். நானோ இருப்பிடத்தை விட்டுச் செல்ல முடியாத நிலையில் இருக்கிறேன். எனது உயிரோ உடம்பை விட்டுப் பிரியாமல் உள்ளது. ஆகவே அந்தப் பொய்யனாகிய கண்ணனின் பாதங்கள் பட்ட மண்ணைக் கொண்டு வந்து எனது உடம்பின் மேல் பூசுங்கள். போட்கன் – பொய்யன்.

*வெற்றிக் கருளக் கொடியான்தன்*
*மீமீ தாடா உலகத்து*
*வெற்ற வெறிதே பெற்றதாய்*
*வேம்பே யாக வளர்த்தாளே*
*குற்ற மற்ற முலைதன்னைக்*
*குமரன் கோலப் பணைத்தோளோடு*
*அற்ற குற்றம் அவைதீர*
*அணைய அமுக்கிக் கட்டீரே.* (7)

<u>எளிய உரை :</u> வெற்றிகளைக் குவிக்கக் கூடிய கருடக் கொடியையுடைய திருமாலின் கட்டுப்பாட்டில் செயல்பாட்டில் உள்ளது இந்த உலகம். இப்படிப்பட்ட உலகத்தில், கண்ணனை ஒன்றுக்கும் உதவாதவனாக அவனது தாய் அசோதை வளர்த்து விட்டாள். குற்றமொன்றில்லாத தூய்மையான எனது மார்பகங்களை கண்ணனின் தோள்களோடு அணைத்திருக்கும்படி அமுக்கிக் கட்டுங்கள். அப்போதுதான் எனது துன்பங்கள் தீரும். (குமரன் – கண்ணன், அற்றகுற்றம் அவை தீர – கண்ணனின் கைகள் பட்டுத் தீண்டப்படவில்லையே என்னும் குற்றம் தீர.)

*உள்ளே யுருகி நைவேனை*
*உளளோ இலளோ என்னாத*
*கொள்ளை கொள்ளிக் குறும்பனைக்*
*கோவர்த் தனனைக் கண்டக்கால்*

*கொள்ளும் பயனொன்று இல்லாத*
*கொங்கை தன்னைக் கிழங்கோடும்*
*அள்ளிப் பறித்திட்டு அவன்மார்பில்*
*எறிந்து என்அழலைத் தீர்வேனே.* (8)

*<u>எளிய உரை :</u> உள்ளத்தால் உருகித் துன்பம் அடைகின்றேன் நான். இவள் இருக்கிறாளா இல்லையா என்று எண்ணிப் பார்க்காதவன் எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்டவன். குறும்புச் செயல்களில் ஈடுபடுபவன். அந்த கோவர்த்தனனைக் கண்டால் நான் என்ன செய்வேன் தெரியுமா? கண்ணனால் ஒரு பயனும் அடையாத எனது மார்பகங்களை வேருடன் அள்ளிப் பிடுங்கி அவனுடைய மார்பில் எறிவேன். இவ்வாறு செய்து அவனது பிரிவாற்றாமையைப் போக்கிக் கொள்வேன். (நைதல் — துன்பம் அடைதல், கோவர்த்தனன் — கோவர்த்தன மலையைக் குடைபோல் தாங்கி, ஆயர்பாடி மக்களையும் ஆநிரைகளையும் காத்த காரணத்தால் கண்ணனுக்குக் கோவர்த்தனன் என்னும் பெயர் ஏற்பட்டது.*

*கொம்மை முலைகள் இடர்தீரக்*
*கோவிந் தற்கோர் குற்றேவல்*
*இம்மைப் பிறவி செய்யாதே*
*இனிப்போய் செய்யும் தவந்தான்என்*
*செம்மை யுடைய திருமார்பில்*
*சேர்த்தா னேலும் ஒருஞான்று*
*மெய்ம்மை சொல்லி முகம் நோக்கி*
*விடைதான் தருமேல் மிக நன்றே.* (9)

*<u>எளிய உரை :</u> திரண்டு வளர்ந்த என்னுடைய மார்பகங்களின் துன்பம் தீரும்படி கண்ணனுக்கு இந்தப் பிறவியிலேயே குற்றேவல் செய்ய வேண்டும். அவ்வாறில்லாமல், இனி மறுபிறவியில் போய் செய்யக் கூடிய தவம் வேறு என்ன இருக்கிறது. கண்ணன் தனது அழகான மார்போடு என்னைச் சேர்த்து அணைத்துக் கொண்டாலும், நல்லது. ஒரு நாள் (பொய்யான சொற்களுக்குப் பதிலாக) கண்ணன் எனது முகத்தைப் பார்த்து உண்மை பேசி*



விடை தந்து என்னை அனுப்பி வைத்தாலும் மிகவும் நல்லது. 'இம்மை' என்பது இப்பிறவி என்றும், 'இனி' என்பது இனிமேல் வரப்போகும் மறுபிறவி என்றும் கொண்டு பொருள் கொள்ளப்பட்டது.

அல்லல் விளைத்த பெருமாளை
 ஆயர் பாடிக்கு அணிவிளக்கை
வில்லி புதுவை நகர்நம்பி
 விட்டு சித்தன்வியன்கோதை
வில்லைத் தொலைத்த புருவத்தாள்
 வேட்கை யுற்று மிகவிரும்பும்
சொல்லைத் தொலைக்க வல்லார்கள்
 துன்பக் கடலில் துவளாரே. (10)

<u>எளிய உரை :</u> பிரிவுத் துன்பத்தை ஏற்படுத்தியவன் கண்ணன். அவன் ஆயர்பாடிக்கு அணிசெய்யக் கூடிய விளக்காக இருப்பவன். 'புதுவை' என்று அழைக்கப்படும் வில்லிபுத்தூரின் தலைவர் விட்டு வித்தர். வியக்கத்தக்க சிறப்புகள் உடையவள் கோதை. அவள் வில்லை வெல்லக் கூடிய (வளைந்த) புருவங்களையுடையவள். அவள் கண்ணனின் மேல் காதல் கொண்டு மிகவும் விரும்பிப் பாடிய பாடல்களைப் பாடித் துதிப்பவர்கள் துன்பக் கடலில் துவண்டு விழ மாட்டார்கள்.

வில்லைத் தொலைத்த புருவம் – வில்லை வென்று விடக்கூடிய வளைந்த புருவம்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

*

*பதினான்காம் திருமொழி – பட்டி மேய்த்து ஓர்*

*(கண்ணனின் பிரிவினால் துன்பம் அடைந்த தலைமகள், அவன் பிருந்தாவனத்தில் இருப்பதாகப் பிறர் கூறக் கேட்டறிகிறாள். ஒவ்வொரு பாடலின் முதல் இரண்டு வரிகள், கண்ணனின் குணநலன்களைக் கூறி, "அவனைக் கண்டீர்களா" என்று வழிப்போர்களிடம் தலைமகள் கேட்பதாகவும், வழிப் போக்கர்கள் அவன் பிருந்தாவனத்தில் இன்ன இன்ன செயல்கள் செய்து கொண்டிருக்கிறான் என்று கூறுவதாகவும் அமைந்துள்ளன. தலைமகள் தனது தலைவனை பிருந்தாவனத்தில் கண்டு கொண்டாள் என்பது இப்பகுதியின் கடைசிப் பாடலில் இருந்து தெரிய வருகிறது.)*

*அறுசீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*
*கல்யாணி இராகம் – ரூபகதாளம்.*

*பட்டி மேய்த்தோர் காரேறு*
*பலதே வற்குஓர் கீழ்க்கன்றாய்*
*இட்டீ றிட்டு விளையாடி*
*இங்கே போதக் கண்டீரே?*
*இட்ட மான பசுக்களை*
*இனிது மறித்து நீருட்டி*
*விட்டுக் கொண்டு விளையாட*
*விருந்தா வனத்தே கண்டோமே.* (1)

<u>எளிய உரை :</u> தலைமகள், பயணிகளே! ஆநிரைகளை மேய்த்துக் கொண்டு வரும் கரிய காளையாகவும், பல தேவனுக்கு இளையவனாக பிறந்த இளங்கன்றாகவும் இருக்கும் கண்ணன் இங்கும் அங்கும் ஓடியாடி விளையாடி நமது இருப்பிடத்திற்கு வரக் கண்டீர்களா?

பயணிகள் : கண்ணன் விருப்பமுள்ள பசுக்களை இனிதே தடுத்து நிறுத்தி குடிநீர் அருந்தும்படியும், மேயும்படிச் செய்து கொண்டும் விளையாடிக் கொண்டிருப்பதையும் பிருந்தாவனத்தில் நாங்கள் கண்டோம்.



அனுங்க என்னைப் பிரிவுசெய்து
ஆயர்பாடிக் கவர்ந்துண்ணும்
குணுங்கு நாறிக் குட்டேற்றைக்
கோவர்த் தனனைக் கண்டீரே?
கணங்க ளோடு மின்மேகம்
கவந்தாற் போல வனமாலை
மினுங்க நின்று விளையாட
விருந்தா வனத்தே கண்டோமே. (2)

எளிய உரை : தலைமகள் : நான் வருந்தும்படி என்னைப் பிரிந்து சென்று, ஆயர் பாடியிலுள்ள வெண்ணெய் முதலிய பொருளைத் திருடித் தின்னுகின்றவன் கண்ணன். அதனால் அவன்மேல் வெண்ணெயின் நாற்றம் வீசும். அப்படிப்பட்ட கரிய காளையாகிய கண்ணன் இங்கே வரக் கண்டீர்களா?

பயணிகள் : கூட்டமான கரியமேகத்துடன் மின்னல் கலந்தால் எப்படியிருக்குமோ அதுபோல கரிய நிறமுள்ள கண்ணனின் உடம்பில் வனமாலை மின்னும்படி அவன் காணப்பட்டான். நின்று விளையாடிக் கொண்டிருப்பதை பிருந்தாவனத்தில் நாங்கள் கண்டோம். மேகம் கண்ணனுக்கும், மின்னல் வனமாலைக்கும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. 'கண்ணன் பிருந்தாவனத்தில் நின்று விளையாடக் கண்டோம்' என்று கூறியிருப்பதால், அங்கு அவனைத் தேடிச் சென்றால் அவனை அடைவது எளிது என்னும் பொருள் இப்பாடலின் நான்காம் அடியில் காணப்படுகிறது.

மாலாய்ப் பிறந்த நம்பியை
மாலே செய்யும் மணாளனை
ஏலாப் பொய்கள் உரைப்பானை
இங்கே போதக் கண்டீரே?
மேலால் பரந்த வெயில்காப்பான்
வினதைச் சிறுவன் சிறகென்னும்
மேலாப் பின்கீழ் வருவானை
விருந்தா வனத்தே கண்டோமே. (3)

<u>எளிய உரை :</u> *தலைமகள் : தான் பிறந்தபோது, மற்றவர்களை வியக்கும்படிச் செய்தவன். நற்குணங்கள் நிரம்பப் பெற்றவன். காண்பவர்களை மயங்கச் செய்யும் மணாளன். பொருந்தாத பொய்களைக் கூறுபவன். அந்தக் கண்ணன் இங்குவரக் கண்டீர்களா?*

*பயணிகள் : கருடன் தனது சிறகினால் நிழல் உண்டாக்கிக் கொண்டுவர அதன்கீழ் கண்ணன் தன்மேல் வெயில் படாமல் வருகிறான். அவனை பிருந்தாவனத்தில் நாங்கள் கண்டோம்.*

*கார்த்தண் கமலக் கண்ணென்னும்*
*நெடுங்கயிறு படுத்து என்னை*
*ஈர்த்துக் கொண்டு விளையாடும்*
*ஈசன் தன்னைக் கண்டீரே?*
*போர்த்த முத்தின் குப்பாய*
*புகர்மால் யானைக் கன்றேபோல்*
*வேர்த்து நின்று விளையாட*
*விருந்தா வனத்தே கண்டோமே.* (4)

<u>எளிய உரை :</u> *தலைமகள் : கரிய மேகத்தில் குளிர்ந்த தாமரைமலர்கள் பூத்தது போல் காணப்படும் கண்ணனின் கண்கள் என்னும் கயிற்றில் எனது மனதைக் கட்டி, தான் போகும் இடமெல்லாம் என்னை ஈர்த்துக் கொண்டு விளையாடும் ஈசனாக இருப்பவனைக் கண்டீர்களா?*

*பயணிகள் : முத்துக்களால் ஆகிய அணியை அணிந்து கொண்டு அழகான ஆண்யானையைப் போல விளையாடி, அதனால் வியர்வையுடன் நிற்கும் கண்ணனை பிருந்தாவனத்தில் கண்டோம்.*

*நமது அன்பிற்குரிய ஒருவரைப்பற்றிய நினைவு நாம் எங்கு சென்றாலும் நம்மை விடாது பற்றிக் கொண்டிருக்கும். இப்பாடலின் மூலம் கண்ணனின் பார்வையாகிய கயிற்றால் தலைவியின் மனம் கட்டுண்டிருந்தது என்பது தெரிகிறது.*



மாத வன்என் மணியினை
 வளையில் பிழைத்த பன்றிபோல்
ஏது மொன் றும் கொளத்தாரா
 ஈசன் தன்னைக் கண்டீரே?
பீதக வாடை உடைதாழப்
 பெருங்கார் மேகக் கன்றேபோல்
வீதி யார வருவானை
 விருந்தா வனத்தே கண்டோமே. (5)

<u>எளிய உரை :</u> தலைமகள் : வலையிலிருந்து தப்பிய பன்றி பலநாள் பட்டினி கிடந்ததால் தனக்குக் கிடைக்கும் பொருள்களை வேறு விலங்குகளுக்குக் கொடுக்காது. அதுபோல எதனையும் பிறருக்கு எளிதில் தராத ஈசனாகிய கண்ணனை, மாதவனாகிய எனது மாணிக்கம் போன்றவனைக் கண்டீரா?

பயணிகள் : 'பீதாம்பரம்' என்னும் ஆடை நிலத்தில் விழும்படி நீண்டிருக்க, பெரிய கரிய நிறமுள்ள மேகக் கன்று போல் வீதியில் ஆர அமர வருபவனை பிருந்தாவனத்தில் கண்டோம்.

தரும மறியாக் குறும்பனைத்
 தன்கைச் சார்ங்க மதுவேபோல்
புருவ வட்டம் அழகிய
 பொருத்த மிலியைக் கண்டீரே?
உருவு கரிதாய் முகம்செய்தாய்
 உதயப் பருப்ப தத்தின்மேல்
விரியும் கதிரே போல்வானை
 விருந்தா வனத்தே கண்டோமே (6)

<u>எளிய உரை :</u> தலைமகள் : தன்னை நம்பியிருப்பவர்களின் பொறுமையைச் சோதிக்கலாமா என்னும் தருமத்தை அறியாது. குறும்புகளைச் செய்பவன் கண்ணன். அவனது கையிலிருக்கும் சாரங்கம் என்னும் வில் எப்படி வளைந்திருக்குமோ அதுபோல் வளைந்த புருவங்களையுடையவன் கண்ணன். அவனைக் கண்டீர்களா?

*பயனிகள் : உருவம் கறுப்பாகவும், முகம் சிவப்பாகவும் உள்ளவன். மலையின்மேல் கதிரவன் உதயமானது போல் உள்ளவனை பிருந்தாவனத்தில் கண்டோம்.*

*கண்ணனின் கரிய உடலுக்கு மலையும் அவனது சிவந்த முகத்திற்குக் கதிரவனும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.*

*பொருத்த முடைய நம்பியைப்*
*புறம்போல் உள்ளும் கரியானைக்*
*கருத்தைப் பிழைத்து நின்றஅக்*
*கருமா முகிலைக் கண்டீரே?*
*அருந்தித் தாரா கணங்களால்*
*ஆரப் பெருகும் வானம்போல்*
*விருத்தம் பெரிதாய் வருவானை*
*விருந்தா வனத்தே கண்டோமே* (7)

*எளிய உரை :* *தலைமகள் : நற்குணங்கள் பெற்று எனக்குப் பொருத்தமானவன். ஆனால் அவனது உடலின் நிறம் கறுப்பாக இருப்பது போலவே உள்ளத்திலும் வஞ்சிக்கக் கூடிய குணம் உள்ளவன். காப்பாற்றாதவன். அப்படிப்பட்ட கரிய மேகம் போன்றவனைக் கண்டீர்களா?*

*பயணிகள் : உலகின் நீர் நிலைகளில் உள்ள தண்ணீர் மேகக் கூட்டங்களாக மாறி, மீண்டும் உலகின் வெப்பத்தைத் தணிக்க விரைந்துவரும் மழை போலக் கண்ணன் வந்து கொண்டிருக்கிறான். அவனை பிருந்தாவனத்தில் கண்டோம்.*

*அருந்தி தாரா கணங்கள்—உலகின் நீர்நிலைகளில் உள்ள தண்ணீரை அருந்திப் பிறகு மழையாகத் தருகின்ற மேகக் கூட்டங்கள். தாரா — தரும் என்னும் பொருள் தரும்.*

*வெளிய சங்கொன்று உடையானை*
*பீதக ஆடை உடையானை*
*அளிநன்கு உடைய திருமாலை*
*ஆழி யானைக் கண்டீரே?*



களிவண்டு எங்கும் கலந்தாற்போல்
கமழ்பூங் குழல்கள் தடந்தோள்மேல்
மிளிர நின்று விளையாட
விருந்தா வனத்தே கண்டோமே (8)

<u>எளிய உரை :</u> தலைமகள் : அவன் வெண்மையான சங்கு ஒன்றை ஏந்தியிருப்பான். பீதாம்பரம் என்னும் ஆடையை உடுத்தியிருப்பான். கருணைக் குணம் உள்ளவன் அவன். சக்கர ஆயுதத்தை ஏந்தி இருப்பவன். 'திருமால்' என்னும் பெயரையுடையவன். அவனைக் கண்டீர்களா?

பயணிகள் : மலர்களில் உள்ள மதுவை உண்ணுகின்ற வண்டுகளின் கரிய நிறம் உள்ள மணம் வீசுகின்ற தலைமயிர் அவனது அகன்ற தோள்களில் விழுந்து மின்னும். இவ்வாறு அவன் நின்று விளையாடிக் கொண்டிருக்க, அவனை பிருந்தாவனத்தில் நாங்கள் கண்டோம்.

சங்கு – பாஞ்சசன்னியம், ஆழி – சக்கரம், சாரங்கம் : பீதக ஆடை – பீதாம்பரம், அளி – கருணை உள்ளம்.

நாட்டைப் படையென்று அயன்முதலாத்
தந்த நளிர்மா மலருந்தி
வீட்டைப் பண்ணி விளையாடும்
விமலன் தன்னைக் கண்டீரே?
காட்டை நாடித் தேனுகனும்
களிறும் புள்ளும் உடன்மடிய
வேட்டை யாடி வருவானை
விருந்தா வனத்தே கண்டோமே (9)

<u>எளிய உரை :</u> தலைமகள் : "உலகைப் படைப்பாயாக" என்று முதல்முதலில் தனது மணம் வீசுகின்ற மலர் போன்ற உந்தியில் நான்முகனாகிய பிரம்மனைப் படைத்தவன். அப்படிப்பட்ட மூலப் பொருளாக இருப்பவன். மானிடப்பிறவி எடுத்து (மண்ணில்) வீடு கட்டி விளையாடும் விமலனைக் கண்டீர்களா?

பயணிகள் : காட்டை நாடிச் சென்று தேனுகாசூரன் என்னும் அரக்கனையும், குவலயாபீடம் என்னும் யானையையும்,

*பறவையின் உருவம் எடுத்து வந்த பகாசுரன் என்னும் அரக்கனையும் வேட்டையாடி வருகின்ற கண்ணனை பிருந்தாவனத்தில் கண்டோம்.*

*பருந்தாள் களிற்றுக்கு அருள்செய்த*
*பரமன் தன்னைப் பாரின்மேல்*
*விருந்தா வனத்தே கண்டமை*
*விட்டு சித்தன் கோதைசொல்*
*மருந்தாம் என்று தம்மனத்தே*
*வைத்துக் கொண்டு வாழ்வார்கள்*
*பெருந்தாள் உடைய பிரானடிக்கீழ்ப்*
*பிரியாது என்றும் இருப்பாரே* (10)

*எளிய உரை :* *பருத்த கால்களையுடைய யானைக்கு அருள்புரிந்த பரமனாகிய கண்ணனை இந்த நிலவுலகிலுள்ள பிருந்தாவனத்தில் கண்டதை விட்டு சித்தர் என்னும் பெரியாழ்வாரின் கோதை சொன்னாள். இப்பாடல்களை மருந்து போல எண்ணி, தமது மனதில் வைத்துக் கொண்டு வாழ்பவர்கள் கண்ணனின் அருள் பெற்று அவனைப் பிரியாது இருப்பார்கள்.*

*முதலையால் பிடிக்கப்பட்ட யானைக்கு அருள் புரிந்த செய்தி இப்பாடலில் கூறப்பட்டுள்ளது.*

*ஆண்டாள் திருவடிகளே சரணம்.*

*

## திருப்பாவை

*

# நாச்சியார் திருமொழி

## பாட்டு முதற்குறிப்பு

### ஒன்றாம் திருமொழி

ஐந்தாம் திருமொழி



ஆறாவது திருமொழி

ஒன்பதாம் திருமொழி



பத்தாம் திருமொழி

*

## ஆசிரியரின் பிற நூல்கள்

- கபீர்தாசரின் கவி மலர்கள்
(திருமலை திருப்பதி தேவஸ்தான நிதியுதவி பெற்றது –1988)
- புதிய அறிவியல் சிந்தனைகள்
- அறிவியல் மேதை லூயி ப்ரெயில்
- ஆழ்கடலுக்குள் ஓர் அதிசயப்பயணம்
(பிரெஞ்சு எழுத்தாளர் ஜூல்ஸ்வெர்ன் எழுதிய 'Twenty Thousand Leagues under the sea' என்னும் அறிவியல் நாவலின் ஆங்கில வழித் தமிழ் வடிவம்)
- தகடூர் தந்த தடயங்கள்
(தமிழ்நாடு அரசு தமிழ்வளர்ச்சித் துறையின் நிதியுதவி பெற்றது – 1993)
- மாயூரம் முனிசீப் வேதநாயகம்பிள்ளை அருளிய 'நீதி நூல்' மூலமும் தெளிவுரையும்
- புறநானூற்று வீரக் கதைகள் ... இருபதிப்புகள்
- கொங்கு நாட்டுத் திருத்தலங்கள் ஏழு
- திருப்பாவை திருவெம்பாவை
(மூலமும் எளிய தமிழ் உரையும்) ... மூன்று பதிப்புகள்
- பாவலர் போற்றும் படிக்காசுப் புலவர்
- பொறியியல் அறிஞர் பா.வே. மாணிக்க நாயக்கரின் தமிழ்ப்பணி – ஓர் ஆய்வு.
(நூலாசிரியரின் எம்.பில்., பட்டத்திற்கான ஆய்வேடு)

*

## ஆய்வரங்குகளில் படிக்கப்பட்ட கட்டுரைகள்

- சேலம் அயோத்தியாபட்டணம் இராமர் கோயில்
- தம்மம்பட்டி மரச்சிற்பக்கலை
- சிற்பங்களில் படிமுடிச்சு
- விடுதலை வீரர் தீர்த்தகிரியார்
- அதியமான் பெருவழி நாவற்றாவளத்துக்குக் காதம் 27– கல் கண்டுபிடிப்பு.
- வல்வில் ஓரி
- தாரமங்கலம் கட்டிமுதலிகளின் தோற்றமும் வீழ்ச்சியும்
- அதியமான் கோட்டை ஓவியங்கள்
- மார்க்கண்டேயர் நாடகம் – ஓலைச்சுவடி ஆய்வு
- கண்ணனூர் மாரியம்மன் தாலாட்டு – ஓலைச்சுவடி அறிமுகம்
- காஞ்சீபுரம் செப்பேடு – செப்புப் பட்டய ஆய்வு



